HERITAGER

# ஹெரிட்டேஜர்

பயணம் : 2 பதிவு : 3 தமிழ் மரபுசார் இதழ் பிப்ரவரி 2019

"தென்னகத்தில் ஒரு திபெத்"
சிறப்புக் கட்டுரையுடன்


Scan or Click for Subscription

தனிச்சுற்றுக்கு மட்டும்

# மின்னிதழ் வாசகர்களுக்கு ஒரு வேண்டுகோள்

நமது மின்னிதழை தொடர்ந்து பெற
கீழ்கண்ட வாசகர் சேர்க்கை படிவத்தை பூர்த்தி செய்யுங்கள்.

https://goo.gl/YZMknG

இம்மின்னதழை மரபுசார் தேடலில் உள்ள
உங்களுக்கு தெரிந்த
குழுக்கள் மற்றும் நண்பர்களுடன்
பகிர்ந்துக்கொள்ளுங்கள்.



உதவிக்கரம் அளிப்பீர்

To Support Us
Click Here

Click here to Subscribe

மின்னிதழுக்கு ஆய்வாளர்கள் மற்றும் வரலாற்று ஆர்வலர்களின்
தேடல் கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன.



# பழந்தமிழர் துறைமுகம் முசிறி பட்டினம்

பேராசிரியர். வேல்முருகன்




அமணன் என்கிற ஒற்றை தமிழ் சொல்லுக்குள் தமிழனின் பேரடையாளம் ஒளிந்து இருப்பதை முசிறி அகழாய்வு நமக்கு வெளிச்சமிட்டு காட்டுகிறது. பண்டைய தமிழனின் நாகரீக எச்சங்கள் இன்றைய தமிழ் மண்ணில் மட்டுமின்றி உலகம் முழுக்க வியாபித்து கிடப்பதை இத்தகைய அகழாய்வுகள் வெளிப்படுத்திக்கொண்டே இருக்கின்றன. உலக சாலைகள் எல்லாம் ரோம் நகரை நோக்கியே எனப்படும் சொலவடை போல் உலக கடல்பெருவழிகள் எல்லாம் பண்டைய தமிழ் துறைமுகங்களை நோக்கியே என்பதற்கான தரவுகள் தொடர்ந்து கிடைத்து வருகின்றன. அக்காலத்தில், கிழக்கு கடற்கரையில் பெரும் வணிகத்தலமாக காவிரிப்பூம்பட்டினம் புகழ் பெற்றிருந்ததைப்போல் மேற்கு கடற்கரையில் முசிறி துறைமுகம் பெரும்புகழோடும், செல்வாக்கோடும் திழைத்திருந்தது.

கேரளாவின் தற்போதைய கொச்சி துறைமுகத்திலிருந்து சுமார் 37 கிலோமீட்டர் தொலைவில் வடதிசையில் பெரியாறு ஆற்றிலிருந்து பிரிந்து ஓடும் சிறு கால்வாயான பெரியாற்தோட்டின் கரையில் அமைந்துள்ள சின்னஞ்சிறு கிராமம் தான் பட்டணம். இந்த பட்டணம் பரவூர் என்கிற சிறு நகரத்திற்கு வடமேற்கிலும், கொடுங்கலூருக்கு தெற்கு திசையிலும் அமைந்துள்ளது. கொச்சி, பரவூர் என்கிற இரண்டு நகர்ப்புறங்களுக்கும் நடுவே பெரியார் ஆறு ஓடி அரபிக்கடலுடன் சங்கமிக்கிறது. நீருக்காக இறைஞ்சிய உயிர்கள் ஆற்றுவழிகளில் தங்களை ஆற்றுப்படுத்தி நிலை கொண்டன என்பது வரலாற்று உண்மை. ஆற்றுப்படுகைகளில் உணவும், அதை ஒட்டிய இடங்களில் பயிரிடுதலும் உயிர் வாழ்வியலை எளிதாக்கியது. உணவில் தன்னிறைவு பெற்ற உயிர் சமூகம் நிலைத்தன்மை கருதியும், வாழ்வியல் உத்தரவாதத்தாலும், நிலைத்தனம் கொண்டு பின்னாட்களில் தன்னை நாகரீகப்படுத்திக்கொண்டது. அந்த நாகரீகத்தின் எச்சங்களே இன்று நமக்கு தொல்பொருட்களாக நம் வரலாற்றை பதிவு செய்கிறது.

பெரியார் ஆறு என்று அழைக்கப்படும் மலைநீர் ஒழுகுவழி சங்ககாலத்தில் பேரியாறு பேர்யாறு என்று அழைக்கப்படிருக்கிறது. இந்த ஆற்றின் கரையிலிருந்து கறிமிளகு, ஏலம், இலவங்கம் உட்பட்ட உணவுக்கு சுவையூட்டும் பதார்த்தங்கள், அகில், சந்தனம் போன்ற வாசனைத்திரவியங்கள் மற்றும் தந்தம், தேங்காய், தேக்கு போன்ற பொருட்களும் அந்நிய தேசங்களுக்கு கடல்வழி ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளது. மிளகிற்கு சமத்துவமான பொருளாக தங்கத்தை அளித்து பண்டமாற்று முறையில் வாணிபம் நடந்தற்கான தரவுகள் நமது சங்க இலக்கியங்களில் வியாபித்திருக்கிறது. அகநானூறில்




(அகம் : 149, 8 - 11) தாயங்கண்ணனார்,

"சுள்ளியம் பேர்யாற்று வெண்ணுரை கலங்க
யவனார் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னோடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி"

என பதிவு செய்துள்ளார். இந்த கவியில், பேர்யாற்று என உரைக்கப்படுவது பெரியாறாகும். நன்கலம் என்பது நல்ல மரக்கலம் என்பதாகும். கறியொடு என்பது கறிமிளகாக கணக்கில் கொள்ளப்படும். யவனர்களுக்கு கிடைக்கப்பெறாத பெரும்பொருள் என்பது நமது மேற்குத்தொடர்ச்சி மலையின் வால் பகுதியில் விளையும் மிளகு. இந்த காரணத்திற்காகவே மிளகிற்கு 'யவனப்பிரியா' என்கிற பெயர் விளங்கலாயிற்று.

யவனர்கள் என்பவர்கள் யாரென அறிதல் அதனினும் சிறப்பாகிடும். சங்க இலக்கியங்களில் யவனர்கள் குறித்த பல குறிப்புக்கள் உள்ளன. சிலப்பதிகாரத்திலும் யவனர்கள் என்கிற பெயர் பயன்பாட்டில் உள்ளது. யவனர்கள் யார் என்பதும் அவர்கள் நம் மண்ணில் வர்த்தக தொடர்பிற்குள் வந்ததற்கும் என்ன ஆதாரம் ? இதற்கான பதில்கள் முசிறி அகழாய்வில் காணக்கிடைக்கின்றது. யவனர்கள் என்கிற இனத்தார் பண்டைய கிரேக்கம், ரோம், பாரசீகம், அரேபியா என வகைப்படுத்தப்படுகின்ற நிலப்பரப்பில் வாழ்ந்த, தமிழக கடல் தொடர்பு எல்லைக்குள் வாணிபம் செய்த நாகரீக நிலப்பரப்பு மக்கள். தமிழ் மண்ணுடன் வாணிபத்தொடர்பு கொண்ட இந்த யவனர்கள் குறித்த தரவுகள் சங்க இலக்கியங்களின் நடைவெளி தோறும் வியாபித்துக்கிடைப்பதை அறிய முடிகிறது. சங்க இலக்கியத்தில் மட்டுமின்றி, சிலப்பதிகாரத்திலும் யவனர்கள் குறித்த பல தகவல்கள் உள்ளன.

சங்க இலக்கிய நூலான பதிற்றுப் பத்து, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், யவனர்களைப் பிடித்து, பின்புறமாக கைகளைக் கட்டி தலையில் நெய்யை ஊற்றினான் என்கிற தகவலை பதிவு செய்கிறது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மகன் செங்குட்டுவன் யவனர்களை வென்று அவர் நாட்டை ஆண்டதாகவும் சங்க இலக்கியப்பாடல்கள் பேசிச்செல்கிறது. யவனர்களை வன்சொல் யவனர் என்று இளங்கோவடிகளும் குறிப்பிடுகின்றார். சிலப்பதிகாரத்துக்கு உரை எழுதிய அடியார்கள், யவனர்களை மிலேச்சர்கள் என்றும், துருக்கியர்கள் என்றும் சொல்கிறார். மட்டுமன்றி, தமிழ் இலக்கியத்தில் அகநாநூறு (149/9), நெடுநெல்வாடை (101), புறநானுறு (56 / 18), முல்லைப்பாட்டு



(61), மற்றும் பதிற்றுப் பத்து பதிகம் என பலப்பல தமிழ் இலக்கியங்களில் யவனர்கள் என்கிற பெயர் பயன்பாட்டில் இருந்துள்ளது. இந்த யவனர்கள் முசிறி துறைமுகத்தை முசிறிஸ் என்று அழைத்துள்ளனர். நாகரீக எச்சங்களின் மீதங்கள் இன்னமும் பின்தொடர்தல்களின்தான் உள்ளன என்பதற்கு தற்கால உதாரணமாக, யவனர்களின் வெனிஸ் நகரத்திற்கு அடுத்ததாக நம் நாட்டில் நடக்கும் மாபெரும் கலைத்திருவிழாவான கொச்சி-முசிறிஸ் பினாலேயே சாட்சி.

முசிறிப் பட்டணத்தில் இருந்து, மிளகும், வாசனைத்திரவியங்களும் மட்டும் ஏற்றுமதியாகவில்லை. பிறபல நாகரீக பொருட்களும் ஏற்றுமதியாகின. முசிறி கடலில் விளைந்த முத்துக்கள் அந்த கடற்கரையை ஒட்டிய நிலப்பகுதியான பந்தரில் சந்தைப்படுத்தப்பட்டு, அந்நிய தேசங்களுக்கு வர்த்தகமான செய்தியை பதிற்றுப்பற்று (6/5) பாடிச்செல்கிறது. பெரியாற்றை ஒட்டிய முசிறி பகுதியான கொடுமணத்தில் தயாரிக்கப்பட்ட பொன்னாபரணங்கள் வியாபாரமான தகவலை பதிற்றுப்பற்று (8:4/5-6) அடித்துரைக்கிறது.

"இன்னிசைப் புணரி இரங்கும் பௌவத்து
நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தாக்
கமழுந தாழைக் கானலம் பெருந்துறை
கொடுமணம் பட்ட வினைமாண்
அருங்கலம்
பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்"

இதில் பந்தர், கொடுமணம் என்பவை ஊர் பெயர்களாக இருக்கலாம். பந்தர் என்பதற்கு அங்காடி என்பது பொருள். அங்காடி என்பது பொருட்களை விற்பனை செய்யும் சந்தையிடத்தைக் குறிக்கும். இந்த அரும்பொருட்களுக்கு இணையாக எதைக்கொடுத்தார்கள் என்பதற்கு விடை முன் சொன்னதுபோல் பொன் மட்டுமல்ல ... யவனக்கப்பல்கள் ஒயின் போன்ற மதுவகைகள், இரும்பு, செம்பு, ஈயம் போன்ற உலோகங்களையும் கண்ணாடியையும் கொண்டு வந்து பண்டமாற்றியும், இணையாக அவர்களது காசுகளையும் மடைமாற்றியுள்ளது.

பட்டிணபூமிக்குள் அகழ்வாராய்ச்சி செய்தபோது இரும்பு காலத்திலிருந்து தொடக்ககால வரலாற்றுக்காலம் வரையிலான தொல் பொருட்களுடன், பல்லாயிரக்கணக்கான வாணிப, வாழ்வியல் பொருட்கள் தொடர்ச்சியாக கிடைக்கப்பெற்றுள்ளன. சேரமன்னர்களின் அரச சின்னமான வில்-அம்பு ஒருபுறத்திலும், மறுபுறம் யானையின் உருவமும் பொறிக்கப்பட்ட நாணயங்களும், ரோம் நாட்டவரின் ரௌலடெட், அரிட்டைன் என்ற உயர்வகைப் பானை ஓடுகள், ரோமானியர் மற்றும் கிரேக்கர்கள் மதுபானங்களை பாதுகாத்து வைத்திட பயன்படுத்திய அம்போரா

# பண்டைய எழுத்துக்கள் –2 ஜாய்ஹூ குறியீடுகள்



**2003 ஆண்டு தொன்மை பொருள் ஆய்வறிக்கை சீனாவின் வரலாற்றை புரட்டிப் போட்டது.**

**சுமார் 8 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஆமை ஓட்டில் வரையப்பட்ட குறியீடுகளுடன் ஒரு பழங்கால ஈமக் காடு கண்டுபிடிக்கப்பட்டது.**

**இந்த குறியீடுகள் பழங்கால சீன எழுத்துக்களுடன் வெகுவாக ஒத்துப்போகின்றன என ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இதில் உள்ள குறியீடுகள் வாழ்வின் தத்துவத்தை கூறும் கண் ஜன்னல் சூரியன் போன்று வரையப்பாடுள்ளன.**

**ஒலி எழுப்பும் காய்களுடன் கண்டெடுக்கபட்ட இதன் அமைப்பு கிலுகிலுப்பை போன்றுள்ளதால், இது பண்டைய ஆவி வழிபாட்டு சடங்குகளுடன் தொடர்புடைய ஒன்றாகக் கருதப்படுகிறது.**

என்னும் கூர்முனை மதுக்குடங்களும் அதிக அளவில் இங்கு கிடைத்துள்ளன. ரோமானிய சுடுமண் பொம்மைகள், ரோம அரசின் பொன், வெள்ளி, செம்பு நாணயங்களும் கிடைத்துள்ளன. அளவுக்கு அதிகமான அளவில் கலைநயத்துடன் கூடிய மணிகளும், செம்பு, யானைத்தந்தத்தால் செய்யப்பட கலைப்பொருட்களும் கிடைக்கப்பெற்றுள்ளன. கல்லினால் ஆன பலவிதமான அச்சுக்கள், முத்திரைகளுக்கான அச்சு உருவாக்கும் சீல்கள், கல்லினாலான எடை கற்கள், கண்ணாடிப்பொருட்கள், கண்ணாடி வளையல்கள், கண்ணாடி செய்து மீதமான கழிவுகள், சுடுமண்ணினால் செய்யப்பட (டெரக்கோட்டா) அலங்காரப்பொருட்கள் மற்றும் விளக்குகளும் அதிக அளவில் கிடைத்துள்ளன. இரும்பு காலத்தைய இரும்பிலானான கலைப்பொருட்கள், கி.மு 44 முதல் 14 வரை ரோமை ஆண்ட அகஸ்டஸ் கால நாணயங்கள், கி.பி. 14 முதல் 37 வரை ரோமை ஆண்ட டைபீரியஸ், கி.பி. 54 முதல் 68 வரையில் ரோமை ஆண்ட நீரோ போன்ற ரோம் நாட்டு அரசர்களின் பெயரும் உருவமும் பொறித்த நாணயங்களும் கிடைத்துள்ளன. மரத்தினால் செய்யப்பட மரப்பொருட்கள், நெசவுக்கு பயன்படுத்தும் கட்டுத்தறிகள், பட்டுத்துணிகளின் எச்சங்கள் என பல நாகரீகப்பொருட்களும் கிடக்கப்பெற்றுள்ளது. இந்த அகழ்வில் கிடைத்த மிகமுக்கியமாக கருதப்படும் ஒரு பொருள் ஒருமரத்தின் அடிக்கட்டையை செதுக்கி செய்யப்பட சிறு படகு என்கிற கட்டுமரம். இந்த அரிய பொருளை அதன் பாதுகாப்பு கருதி அது கிடைத்த நிலையிலே மூடிவைத்து பாதுகாக்கப்படுகிறது.

அதைப்போல், வாசனைப்பொருளான குங்கிலியம்





சாம்பிராணியும் அதிக அளவில் இங்கு கிடைத்துள்ளது. இந்த குங்கிலியம் சவுதி அரேபியாவிலிருந்து கொண்டுவரப்பெற்று சந்தைப்படுத்தப்பட்டிருக்கலாம். கோர்-ரோகி மற்றும் கனா போன்ற பழம்பெரும் துறைமுகங்கள் குங்கிலியம் தயாரிப்பு மற்றும் ஏற்றுமதிக்கு, உலக அளவில் பெற்று விளங்கிய துறைமுகங்களாகும். முசிறியில் கிடைக்கப்பெற்ற அகழ் பொருட்களில் அதிகமானவைகள் கி.மு. 500 முதல் கி.பி. 300 வரையிலானதாக இருக்கலாம் என கணிக்கப்பட்டுள்ளது.




எகிப்தில் பிரமிடுகள் உள்ள இடங்களில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியில் கிடைக்கப்பெற்ற அகழ்வு பொருட்களும் முசிறி துறைமுகம் கிரேக்கத்துடன் கொண்டிருந்த வாணிபத்தொடர்பை உறுதி செய்கின்றது. நமது நாட்டுப் பொருட்களான தேக்கு, தேங்காய் சிரட்டை, பருத்தி பொருட்கள் போன்றவைகள் பிரமிடுகளுக்கு அருகில் கிடைத்துள்ளன. இதைவிட பிரமிக்கத்தக்கவிதத்தில் சுமார் ஏழு டன் மிளகும் மண் ஜாடிக்குள்ளிருந்து புதைபொருளாக எடுக்கப்பட்டுள்ளது. மிளகினை ரோமானியர்கள் 'மரிசி' என உச்சரித்துள்ளனர்.

மரிசி ஏற்றுமதியான இடத்தின் பெயர் மருவி முசிறியாகி இருக்கலாம். இந்த புகழ்பெற்ற துறைமுகப்பட்டினம் கி.பி. 1341 - ல் பெரியாற்றில் ஏற்பட்ட பெருவெள்ளத்தால் அழிந்து உருக்குலைந்து



www.heritager.org



# சோழர்கால நாடகக் கலை



அடியார்க்கு நல்லார், நாடகம் என்பது சாந்திக் கூத்தின் நான்கு வகைகளில் ஒன்று என்று கூறுகின்றது.

அது கதை தழுவி வரும் என்றும் கூறுகிறார். சோழர் காலத்திய கல்வெட்டுகளில் நாடகம் பற்றிய குறிப்புகள் உள்ளன.

தஞ்சை பெரியகோயிலில் முதலாம் இராசேந்திரன் காலத்தில், வைகாசி மாத பெருவிழாவில் ஆண்டுதோறும் "இராசராசேச்சுவரம்" என்ற நாடகம் நடந்ததென்றும், அதில் நடித்த நடிகரின் பெயர் திருவாலன் முதுகுன்றனான விசயராசேந்திர ஆச்சார்யனுக்கு ஆவார்.

இதில் நடிக்க அவருக்கும் அவர் வழிமுறையினருக்கும் காணிக்கையாக பண்டாரத்தே நெல் அளக்கப்பட்டதென்றும் அவ்வூர் கல்வெட்டு கூறுகிறது.

போயிற்று.

அப்பெரும் வெள்ளப்பெருக்கின்போது பெரியாறு தனது நடைவழிதிசையை வலது புறமாக மாற்றி முசிறியை மண்கொண்டு மூடியதனால் அன்றைய முசிறி பட்டிணம் முசிறியை இழந்து இன்றைய பட்டிணமாக புதையுண்டு கிடக்கிறது.








# தாளித்த குச்சிகிழங்கு...!

## வைஷ்ணவி, சேலம்





பொதுவாக கைத்தறி நெசவு செய்பவர்கள் இருக்கும் பகுதிகளில் வயிறு நிரம்ப கூடிய தின்பண்டங்கள் கொஞ்சம் அதிகமாகவே விற்பனை ஆகும்.

குறிப்பாக அவித்தக்கடலை, பனங்கிழங்கு, மரவள்ளிக்கிழங்கு, சக்கரைவள்ளிகிழங்கு, அளவாபுட்டு இப்படி நான் சுவைத்த பாரம்பரிய உணவு பட்டியல் மிகவும் நீளமானது.

அந்த வகையில் தாளிச்ச குச்சிகிழங்கு (மரவள்ளி கிழங்கு) குச்சிகிழங்கை வேக வைத்து சுடச்சுட சர்க்கரை தொட்டு அல்லது சட்னி தொட்டு சாப்பிடுவது தனி சுகம் என்பது நம்மில் எத்தனை பேருக்குத் தெரியும். ஆனால் அதே குச்சிக்கிழங்கை தாளித்து சாப்பிட்டால், அதன் சுவை இன்னும் அருமையாக இருக்கும் என்பதும் உண்மை. வேக வைத்த குச்சிகிழங்கை தாளித்து சாப்பிடுவது சேலம் மக்களின் பாரம்பரியங்களில் ஒன்று. கார்ப்பரேட் பகாசுர தின்பண்டங்கள் வரவால் இது போன்ற பாரம்பரிய உணவுகள் அழிந்து வருவது வேதனை அளிக்கிறது.

வேக வைத்த குச்சிகிழங்கை சின்ன சின்ன துண்டுகளாக நறுக்கி ,வாணலியில் போட்டு அதனுடன் மஞ்சத்தூள், வரமிளகாய், கடுகு, உளுத்தம்பருப்பு போட்டு தாளித்து எடுத்து சுடச்சுட தட்டில் வைத்து சாப்பிட்டால், காரசாரமாக அதன் டேஸ்டே தனி தான்.

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு தாளித்த குச்சிகிழங்கை செய்து கொடுத்துப் பாரம்பரிய உணவு பழக்கத்தை மீட்க வேண்டும் என வேண்டுகிறேன்.

# மறுகால்தலை சமணர்படுகைகள்

–ச.சு. நாகராஜன், சித்த மருத்துவ மாணவன்



கடந்த வருடத்தின் கடைசி நாளின் மாலைப் பொழுது சமண படுக்கையில் வருடக் கடைசியிலாவது சயனிக்க எண்ணம். அதனால் நானும் தம்பி சோமேஷும் மாலை சரியாக 5 மணிக்குச் சித்த மருத்துவக் கல்லூரியை விட்டுக் கிளம்பினோம்.

நேரே முதல் தீர்மானம் நெல்லைச் சீமையின் சீவலபேரியை நோக்கியதாகப் பயணம். வேகப் பயணத்தை இளந்தென்றல் மட்டும் எங்களை வேவு பார்த்து பின்தொடர்ந்தது. பின் சீவலபேரியை நெருங்க நெருங்க வயல்கள் வரிசைகட்டி இருபுறமும் நிற்க.... தம்பி வியந்து நின்றுவிட்டான்...
எங்க ஊரில் (அரியலூர்) இப்படியெல்லாம் பார்க்கவே முடியாது என்று வியந்து பார்த்துக் கொண்டிருந்தவனை இதெல்லாம் இங்கே சகஜம் தான்.

இது நெல்லை. தாமிரபரணியின் தலைப்பிள்ளை. அதுவோ அரியலூர், சூரியனின் வெஞ்சினம் முழுதும் வரிந்து ஓடும் ஊர் என்றதும்... ஆற்றாமையை அடக்கிக்கொண்டு சீவலபேரியை நோக்கி வண்டியை முடுக்கினான்.



சீவலபேரி இந்தப் பெயரே ஒரு திரிபுதான். ஸ்ரீ வல்லபபாண்டியன் ஆண்ட ஊரில், அவன் கட்டிய ஏரியின் நினைவாய், அந்த ஊரிற்கு அவன் பெயர் வந்தது. இது ஆயிரம் ஆண்டுகள் முன்னர் நடந்த சங்கதி. வழியில் சாலை எங்கும் மூக்குத்திப்பூக்கள் முகம் காட்ட.. "தம்பி இது தான் யா, கூத்தங்குதம்பைனு நம்ம மருத்துவம் சொல்றது" என்று அவனிடம் சொல்லி விட்டு சீவலபேரி கடந்தோம்... அங்கு நின்றிருந்த சிறு கோயில் ஒன்றின் மரத்தேர் அழகாக செதுக்கப்பட்டதை கண்டபோது பெருமிதமாய் இருந்தது.

பின் நகர்ந்து நேரே தாமிரபரணி கரையோரம் நடந்து, நேரே மறுகால்தலை நோக்கி விரைந்தோம். ரோட்டு பாதையில் இருந்து விலகி பின் ஒற்றையடிப் பாதையில் நகர்ந்து. பின் சில நிமிடத்தில் அந்த மலையின் முகப்பு கண்ணில் பட்டது.

சில நிமிட நடையில் அந்தக் கோயில் முன் வந்திருந்தோம். கீழே சிறுதெய்வங்களாய் வீற்றிருந்த கொம்பு மாடனையும், கொம்பு மாடாத்தியையும் வழிபட மனம் நிற்கவில்லை.... அந்த பாகுபலியை பார்க்க அவா.. நேரே படிக்கட்டுகளில் மலையேறத் தொடங்கிவிட்டோம்.

அந்தச் சமணத்து பாகுபலிக்கு இன்றைய பெயர் "பூலுடைய சாஸ்தா" ஒரு சிறுதெய்வமாய் சுருங்கி நின்று அருள்பாலிக்கும் சமணர்களின் கடவுள்... அதே நிர்வாண கோலத்தில் நிற்கிறார்.

அருகே இந்துமதம் அரவணைத்ததால் உருவான விநாயகர் சன்னதி, ஸ்ரீமலையழகியம்மன், ஸ்ரீமலைபேச்சியம்மன், சங்கதிபூதத்தார் எனச் சிறு தெய்வங்கள் வரிசையாக நின்றார்கள். பின் பூலுடையார் மலையில் உச்சியில் சில நிமிடங்கள் செலவிட்டோம்.

அங்கிருந்து பார்த்தபொழுது பச்சைபசேல் வெளிகளும், ஒற்றையடிப் பாதைகளும் பார்க்கவே ஏழிலாக இருந்தது. பின் கால் மணி நேரத்தில் கீழே இறங்கபோதுதான் கவனித்தோம் அந்த மலையைச் சூழ்ந்திருந்த வெண்முள்ளி மலர்களும்... பின் தோகை விரித்தாடிய இரட்டை மயில்களும் அந்த இடத்திற்கு புதுவித அழகை தர தவறவில்லை. நேரே இறங்கி கீழே இறங்கி சமண படுக்கைகள் குறித்து அங்கிருந்த பெரியவரிடம் கேட்க அவர் அந்த மலைக்கு பின்னாடி போங்க என்று வழிகூறினார்.

அந்த இருமலைகளைப் பிளந்த ஒற்றையடிப் பாதையில் நடந்து பின்னே வந்ததும் தான் பார்த்தேன். அந்த பெருந்துண்டுப் பாறையும் அதன் பிரமாண்டமும்.. அதற்குக் கீழே செவ்வையாக வடிக்கப்பட்ட சமணப்படுகைகளும் இருந்தன.

சீராக வடிவமைப்பட்ட 6 கற்படுகைகளும் காலத்தால் 1200 ஆண்டுகளுக்கும் முற்பட்டது . அதை அருகில் பிற்காலத்தில் அமைக்கப்பட்ட பிற்காலத்தைய சில கற்படுக்கைகளும் பார்க்க முடிகிறது. ஆனால் இதன் வடிவ சீரமைப்பு அதில் இல்லை. ஆங்காங்கே சிறு சிறு குழிகளும் அந்தப் பாறையில் காணப்படுகிறது.



அவர்களின் உணவு தயாரிப்பு, மருந்து தயாரிப்பு போன்ற பிறவற்றிற்கு பயன்படுத்தி இருக்கலாம் மட்டுமின்றி இந்த கற்படுகையினை சமணர்களுக்கு வழங்கியதைக் கூறும் தமிழி கல்வெட்டு பாறையில் காணப்படுகிறது.

அந்த கல்வெட்டு கூறும் செய்தி "வெண்காசிபன் கொடுத்த கல்கஞ்சணம்" என்று தமிழி எழுத்துகளைத் தாங்கி 1200 ஆண்டுகளாகச் சமணர்களின் இருப்பிற்கு மௌனச் சாட்சியமாய் அங்கே நிற்கிறது.

அதன்படி பாண்டிய தளபதி வெண்காசிபன் என்பவனால் சமணர்களுக்கு அமைத்துக் கொடுக்கப்பட்ட கற்படுகைகள் என்று மொழிகிறது. குகையின் கிழக்கே "சுவாமி அழகிய அம" என்னும் தமிழி கல்வெட்டும் அவ்விடம் உள்ளது. அது முடியுறாத நிலையில் உள்ளது. அந்தக் குகையின் மாடத்தில் மழை நீர் உட்புகா வண்ணம் விளிம்புகள் செறிவாய் காடி அமைக்கப்பட்டுள்ளது

இன்றைய நாளில் தொல்லியல் துறையின் கையில் இருக்கும் அந்த இடம்... சுற்றிலும் புதர்கள் சூழ்ந்து முறையான பராமரிப்பு இன்றி காணப்படுவது தான் மனம் ஒப்பவில்லை. தமிழின் ஆதிதடங்கள் அழிவின் விளிம்பில் தொக்கி நிற்பது "மெல்லச் சாகும் தமிழ் இனி" என்றே பாரதியின் கூற்று தான் சுற்றியது.

இனியேனும் வளர்வது தமிழாகட்டும் என மனதில் நினைத்தபடி அவ்விடம் விட்டு நகர்ந்தோம்.



# கடல்வணிகத்தில் சோழர்கள்



**கடல்வணிகத்தில் சோழர்கள் சிறந்து விளங்கினர். தாய்லாந்து, இந்தோனேசியா போன்ற நாடுகளுடன் வாணிகத் தொடர்புகள் கொண்டிருந்தனர். கப்பல் கட்டுவதிலும் சோழர்கள் திறமையானவர்கள். தென்தமிழகத்தில் கட்டப்பட்ட கப்பல்களில் இரும்பு ஆணிகளுக்கு பதிலாக நார்களை கொண்டு பிணைத்து கப்பல்களை உருவாக்கியுள்ளனர்.**

**முதலாம் இராசராசனும் பிறமன்னர்களும் சீனாவுடனும் வணிக உறவு கொண்டிருந்தனர். தாராசுரத்திலும் கங்கைகொண்ட சோழபுரத்திலும் அகழாய்வில் சீன பீங்கான் பாண்டங்கள் கண்டுபிடிக்கப்படுள்ளது. சீனக் காசுகள் கிடைத்துள்ளன. சீன காசுகள் தமிழகத்தின் தஞ்சாவூர்ப் பகுதியில் பெரும் எண்ணிக்கையில் கிடைப்பது அப்பகுதி வணிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்ததற்கு ஆதாரமாக உள்ளது.**

# உத்திரமேரூர் காஞ்சி பயணம்

– ஐந்திணைக் காப்போம். சண்முகப் பிரியன்





பல மாதங்களாக திட்டமிடப்பட்டு இடையில் சில காரணங்களால் தடைபட்டு, நிறைவேறாமல் இருந்த எங்களின் உத்திரமேரூர்-காஞ்சிபுரம் பயணம் கடந்த 03-02-2019 அன்று நிறைவேறியது.

எங்களது ஊரான திருக்கழுக்குன்றத்தில் இருந்து நண்பர்கள் ஹரிஷ்குமார், லோகேஷ்வரன், முரளிகிருஷ்ணன், பிரசாந்த் மற்றும் அரசுப்பள்ளி ஆசிரியரான பாலசுந்தரம் அவர்களும் எங்களுடன் இணைந்து கொள்ள அதிகாலை 5 மணிக்கு பயணம் தொடங்கியது.

எங்கள் பயணத்தின் முதல் இடமாக நாங்கள் தேர்வு செய்த ஊர் உத்திரமேரூர். பழைய கற்காலத்தை சேர்ந்த கல் திட்டை, வடவாயில் செல்வி எனும் பல்லவர்கால கொற்றவையின் பலகைக்கல் சிற்பம், ஐயனார், பராந்தக சோழன் காலத்தில் குடவோலை தேர்தல் முறை மற்றும் விதிகளை கூறும் கல்வெட்டு, த்ரி தள அஷ்டாங்க விமான அமைப்பு கொண்ட சுந்தர வரதராஜ பெருமாள் கோயில், புணரமைக்கப்பட்ட கைலாசநாதர் கோயில், மாதிரி அம்மனாக வணங்கப்படும் சோழர்களின் காவல் தெய்வமான நிசும்பசூதனி, சப்தமாதர் சிற்பத்தொகுதி என உத்திரமேரூர் வரலாற்று ஆர்வலர்களுக்கு அள்ள அள்ள குறையாத அட்சயபாத்திரமாக விளங்குகிறது.

அதைத்தொடர்ந்து உத்திரமேரூர் அருகேயுள்ள அனுமந்தண்டலம் எனும் கிராமத்திற்கு பயணப்பட்டோம். அங்கே பல்லவர்காலத்தை சார்ந்த போரில் பங்கெடுத்த வீரனின் நினைவாக வைக்கப்பட்ட நடுகல், சப்தமாதர், இரண்டு தவ்வை சிற்பங்களையும், ஒரு வீட்டின் கொல்லைப்புறத்தில் உள்ள பாறையில் ஏகாந்தமாக நின்ற நிலையில் எட்டுக்கரங்களை உடைய கொற்றவையின் புடைப்புச்சிற்பம் என தன்னுடைய தேடலில் கண்ட இவ்விடங்களை எங்களுடைய உத்திரமேரூர் நண்பர் திரு. பாலாஜி அவர்கள் அழைத்துச் சென்று காட்டினார்.

அங்கிருந்து கூழமந்தல் கங்கை கொண்ட சோழீஸ்வரர் திருக்கோயில் சென்றோம்.








இக்கற்றளியானது இராஜேந்திர சோழனின் குருவான ஈசான சிவ பண்டிதரால் கட்டப்பட்டதாகும். அதைத் தொடர்ந்து மாமண்டூர் மற்றும் நரசமங்கலம் கிராமத்தில் சித்திர மேக தடாகத்தின் கரையிலுள்ள மலைத்தொடரில்
முதலாம் மகேந்திரவர்மன் காலத்தில் குடையப்பட்ட நான்கு குடைவரை கோயில்களையும், மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழி கல்வெட்டு மற்றும் சமணப்படுக்கைகள் கொண்ட இயற்கை குகைத்தளத்தையும், அருகிலுள்ள குரங்கணில்முட்டம் குடைவரையையும் பார்வையிட்டோம்.

காஞ்சிபுரத்தில் மதிய உணவை முடித்துவிட்டு காஞ்சி நகரில் அதிகம் அறியப்படாத கான்கிரீட் காடுகளுக்கு நடுவே மறைந்திருக்கும் பல்லவ பொக்கிஷங்களான மணற்கற்களால் உருவாக்கப்பட்ட கட்டுமான கோயில்களான பிறவாஸ்தானம், இறவாஸ்தானம், மதங்கீஸ்வரர், ஐராவதேஸ்வரர் கோயில்களை கண்டு வியந்தோம். இத்தனை ஆண்டுகளை கடந்து இயற்கை மற்றும் செயற்கை இடர்களை சந்தித்துப் அவற்றின் கம்பீரம் சிறிது கூட குறையவில்லை.

அதற்கு பின்னர் இரண்டாம் நந்திவர்மனால் எடுப்பிக்கப்பட்ட பரமேஸ்வர விண்ணகரம் எனும் வைகுண்ட பெருமாள் முத்தள விமானக் கோயிலையும், இறுதியாக இராஜசிம்மனின் உன்னத படைப்பான கச்சிப்பேட்டு பெரியத் திருக்கற்றளியான கைலாசநாதர் கோயிலை பார்த்து ரசித்தோம். மேலும் இப்பயணத்தில் கல்திட்டை, குகைத்தளங்கள், சமணப்படுக்கைகள், குடைவரைக் கோயில்கள், பாறைகளில் குடையப்பட்ட புடைப்புச் சிற்பங்கள், பலகைக்கல் சிற்பங்கள், மணற்பாறைகளை கொண்டு உருவாக்கபட்ட கட்டுமானக் கோயில்கள், முத்தள விமானம், அஷ்டாங்க விமானம், சோழர் கால கற்றளிகள் என பழைய கற்காலம் முதல் பல்லவர் சோழர் காலம் வரை படிப்படியாக கட்டிடக்கலை வளர்ச்சியடைந்தை அறிந்து கொள்ள முடிந்தது.

மொத்தத்தில் எங்களுடைய உத்திரமேரூர்-காஞ்சி பயணம் நாங்கள் திட்டமிட்ட இடங்கள் மட்டுமில்லாமல் மற்ற பல புதிய இடங்களை பார்ப்பதற்கும், அவற்றை பற்றி கற்பதற்கும் நிறைய புதிய விஷயங்களை வாரி வழங்கியதென்றே சொல்ல வேண்டும்.



www.heritager.org

# மங்கா தேவி (தொடர்)

கோமகள் குமுதா

ஓவியம்: பூரணி

அத்தியாயம் -- 1

பௌர்ணமி இரவு, வெண்மதியின் குளிர்க்கிரணங்கள் இரவு பெரிதும் ஏறிவிட்ட அந்தச் சமயத்தில் சஞ்சலத்துடன் மஞ்சத்தில் புரண்ட தஞ்சை நாயக்கரின் அந்த பஞ்சவர்ணக்கிளியைக் காண அஞ்சிய காரணத்தால் தன் கிரணங்களால் அந்த அறைச் சாளரத்தின் கட்டைமீது மட்டும் மெல்லத் தொட்டு ஏறித்திருடன் போல் உள்ளே பார்க்க முயன்று கொண்டிருந்தான் பூரணசந்திரன். கட்டிலில் கிடந்த அந்தக் கட்டழகியை திருட்டுச் சந்திரன் காணும்படி விடக்கூடாதென்று திட்டமிட்டுச் சாளரத்தின் மேற்புறத்தில் தொத்தி ஏறிய பூங்கொடியொன்று சாளரத்தை அரைப்பாகம் மறைத்துவிட்ட தன்றி தொங்கிய தன் கொடிக்கரங்களால் சாளரக் கட்டையில் பாய்ந்திருந்த வெண்மதியின் கிரணங்களையும் அகற்றி விட அப்படியும் இப்படியும் அசைந்து கொண்டிருந்தது.

அந்தக் கொடியின் மனநிலையைப் புரிந்து கொண்டது போல் சற்றுத் தொலைவிலிருந்த பெரிய புங்கமரமொன்றும் அதற்குத் துணை செய்ய இஷ்டப்பட்டுத் தன் இலைகளைக் கொண்டு சந்திரன் திருஷ்டியைப் பெரிதும் தடுத்தது. சாதாரணமாக இயற்கையின் கவர்ச்சி எழிலில் இதயத்தைப் பறிகொடுக்கும் இயல்புள்ள மங்கலதேவி எதையும் காணும் சக்தி இல்லாமல் அந்த இரவு நேரத்தில் உறங்காமல், ஆனாலும் தன் அஞ்சன விழிகளைச் சிறிதும் திறக்காமலும், இயற்கை அழகுகளை அள்ளிப்பருகாமலும், செயலற்ற வண்ணமே மஞ்சத்தில் படுத்துக் கிடந்தாள். உடல் செயலற்றுக் கிடந்ததே தவிர உள்ளம் செயலற்றிருக்காமல் பலபல



எண்ண அலைகளில் புரண்டு கொண்டிருந்தது. புறக்கண்கள் மூடியிருந்தாலும் அவள் அகக்கண்கள் பெரிதும் விரிந்து மனதிலோடிய காட்சிகளைக் கண்டு கொண்டிருந்தது.அதில் இன்பமும், துன்பமும், காதலும், கலையும், வீரமும், கோரமும், கோபமும், சுபமும் இப்படி எல்லாமே கலந்த காட்சிகள் மனத்திரையில் ஓடியதால் அவள் மனம் தஞ்சையின் அரசலாற்றங்கரையில் நடந்த நிகழ்ச்சியைச் சுற்றியே வட்டமிட்டது.

தஞ்சை மன்னன் விஜயராகவ நாயக்கனின் ஒரே செல்வப்புதல்வி மங்கல தேவியின் உள்ளத்தில் உறைந்து அவள் இதயத்தில் இன்ப வெள்ளமெனப் புரண்டது அந்த வீரனின் முகம்.

அவள் நாடி நரம்புகளில் காதல் சுவையோடி முகத்திலும் படர்ந்து அவள் முகம் பிரகாசமான இன்னொரு நிலவாக ஒளிர்ந்தது. முகத்தில் ஒரு வசீகரத்தையும் சந்துஷ்டியையும் நிலவ வைத்ததால் அவள் மிதமிஞ்சிய சாந்தியாலும் ஆனந்தத்தாலும் பெருமூச்சு விட்டாள்.

அவன் நினைவுகளால் அதுவரை செயலற்றுக் கிடந்த உடல் துள்ளியெழுந்து கொடிவீட்டை நோக்கி அவள் கால்கள் தாமாகவே நடந்தன. சாதாரண சமயங்களில் நந்தவனத்தின் அழகையும், மலர்களையும், மயில்களையும், மான்களையும் ரசிக்கும் அவள் கண்கள் அன்று எதுவுமே காணவில்லை. நாழிகைகள் மெல்ல மெல்ல நகர்ந்தது. அந்தக் கொடிவீட்டின் அழகு கண்ணைப் பறித்தது. மல்லிகை மணம் நாசியை நிறைத்தது. ஆனால் மனதில் தோன்றிய அந்த வீரனின் முகம் அவள் மனக்கண் முன் மீண்டும் எழவே அவள் சுற்றியிருந்த அனைத்தையும் மறந்து இன்ப வானில் சிறகடித்தாள்.

திடீரென்று அவள் படுத்துக் கிடந்த பளிங்கு மேடை மீது மகிழம்பூக்களும் மல்லிகை மலர்களும் இருக் கைகள் தூவின.

அவளை முன்புறம் இழுத்துத் தன் கைகளுக்குள் வளைத்துக் கொண்டது. அவள் உணர்வுகள் திடீரெனக் கொந்தளித்து எழவே அவள் துடிதுடித்து மேடையிலிருந்து எழுந்து உட்கார முற்பட்டாள். ஆனால் அவளை வளைத்துப் பிடித்திருந்த கரங்கள் அவளை எழவொட்டாமல் தடுத்ததன்றி "தேவி நான் அவரில்லை. என்னை இவ்வளவு இறுக்கமாகப் பிடித்திருப்பதை கொஞ்சம் தளர்த்துங்களேன்" என்று காதில் ரகசியம் பேசி மெல்லச் சிரித்தாள் இளவரசியின் நெருங்கிய அந்தரங்கத் தோழி மங்கா.

அவளை முன்புறமாக இழுத்து தன் மடியில் கிடத்தி, "அடிக்கள்ளி தொட்டதும் நான் அறிவேன் இது என் பிரியமான மங்காவின் தளிர்க்கரங்கள் என்று", அணைத்தபடி அவளைக் கட்டியணைத்து அவள் கன்னத்தில் முத்தமிட்டாள் இளவரசி மங்கல தேவி.

"ஐயோ தேவி என்னை விடுங்களேன்" என்று செல்லமாக அவளிடமிருந்து திமிறினாள் தோழி மங்கா.

"நள்ளிரவு தாண்டி இரண்டு நாழிகைகள் முடியப் போகிறது. பனியும் அதிகமாக இருக்கிறது. நாளைக் காட்டிற்கு வேட்டையாடச் செல்ல வேண்டும் என்றீர்களே இரவு உறக்கமில்லாமல் நாளை வேட்டைக்கு செல்வதெப்படி. வாருங்கள் உள்ளே செல்வோம்" என்றாள் மங்கா.

இருவரும் கைகளைக் கோர்த்து கொண்டு அந்த அர்த்த ஜாமத்தில் கலகலத்தபடி அரண்மனையின் உள்ளே சென்றனர்.

இளவரசி மங்கலதேவியும் அவள் தோழி மங்காவும் இரட்டைப் பிறவிகள் போல ஒரே முகத்தோற்றம். இந்த உருவ ஒற்றுமையினால் இளவரசி தன் தந்தையையும் தாயையும் சமயத்தில் அரண்மனையில் உள்ள அனைவரையும் மங்காவுக்கு தன் ஆடைகளை அணிவித்து தன்னைப் போலவே அலங்காரம் செய்து தன் அறையில் தான் இருப்பதாக எல்லோரையும் நம்ப வைத்து காட்டிற்கு வேட்டையாடப் போய்விடுவாள்.

இளவரசி வரும் வரை அவள் அறையை விட்டு வெளியே செல்லும் போது தன் உடைகளை அணிந்து கொண்டு அறைக்குள் வந்து இளவரசியின் உடைகளை அணிந்து கொண்டு இப்படி மாற்றி மாற்றி தானும் இளவரசியும் இருப்பது போல் நடந்து கொள்வாள் மங்கா. இளவரசி மங்கலதேவியின் அன்பு அவளை அவ்வாறு செய்ய வைத்தது. தன் பத்து வயதில் தாய் தந்தையை இழந்து தஞ்சை நாயக்கரின் ஆட்சியிலிருந்த சிற்றரசின் மகளாகப் பிறந்து தற்போது தஞ்சை நாயக்கரின் வளர்ப்பு மகளாக இளவரசியின் தோழியாக தான் வந்த நாளிலிருந்து ஒருநாள் கூட தன் மனம் வருத்தம் அடையாமல் தன் ஆருயிர் தோழியாக உடன் பிறந்தவளாக தன் மேல் அன்புகாட்டும் அந்த நல்ல இளவரசிக்காக தன் உயிரையும் தர சித்தமாக இருந்தாள் மங்கா. மங்கலதேவியின் வீரமும் அழகும் பேரன்பும் அவளுக்காக எதையும் செய்யலாம் என்ற துணிவை மங்காவுக்கு கொடுத்தது.

எப்பொழுதும் ரகசியமாகக் கோட்டை சுரங்கப்பாதை வழியாக வேட்டைக்குச் சென்று இரண்டு மூன்று நாட்களில் திரும்பி விடும் இளவரசி மங்கல தேவி அந்த முறை ஐந்து நாட்கள் ஓடியும் வராததால் கவலை கொண்ட மங்கா என்ன செய்யலாம் என்று சிந்தித்தவாறே அன்று உறங்காமல் இரவைக் கழித்தாள். மறுநாள் விடிந்தும் விடியாமலும்



ஆற்றங்கரை பக்கத்திலுள்ள அம்மன் கோயிலுக்கு சென்று வருவதாக மகாராணியிடம் அனுமதி பெற்று பல்லக்கில் ஏறி தன் இளவரசியைக் காண புறப்பட்டாள்.

அடடா ..ஆ...என்ன இது!! இப்படி ஆல மரத்தினடியில் அசையாமல் கட்டை போலக் கிடப்பது யார் இளவரசி மங்கல தேவியா!!!. ஐயோ என்னாயிற்று........ மங்கா தேவி

அத்தியாயம் -2

பெண் வாடை சிறிதும் படாமல் வீரர்களின் நடுவில் எப்பொழுதும் கைதியாக ஒரு பொம்மை மன்னனாக பட்டமேற்ற பதினாறு வயதிலிருந்து வாழ்ந்த சொக்கநாதன் அன்று திடீரென்று தன் முன்னால் ஓடி வந்து மயங்கிச் சரிந்த அந்தப் பெண்ணைக் கண்டான். அவளைத் துரத்திக் கொண்டு உருவிய வாட்களுடன் பத்து வீரர்கள் பின் தொடர்ந்து ஓடிவந்தனர். மயங்கிச் சரிந்த அவளை நெருங்க முற்பட்ட நேரத்தில் தங்கள் முன்னே நின்று கொண்டிருந்த அந்த வாலிபனைப் பார்த்து

"ஏய் யார் நீ? விலகி நில். இவளை நாங்கள் அழைத்துச் செல்ல வேண்டும் என்று கடுமையான குரலில் கூறினர்."

"நீங்கள் யார்?" என்று மிக மிருதுவான குரலில் கேட்டான் சொக்கன்.

"எங்களைப் பார்த்தால் தெரியவில்லை நாங்கள் மதுரை நாயக்கரின் வீரர்கள். எங்களைக் கடமையிலிருந்து தடுப்பது பெருங்குற்றம்" என்று சற்று கோபத்துடன் பேசினான் அந்தக் கூட்டத்தின் தலைவன்.

"உங்கள் செயல் வீரர்களின் செயலாகத் தெரியவில்லையே. ஒரு பெண்ணைத் பிடிக்க இத்தனை வீரர்களா?" என்ற சொக்க நாதனின் குரலில் இகழ்ச்சி பெருகிற்று.

"இந்தப் பெண்ணை உங்களுக்குத் தெரியாது" என்று வீரர் தலைவன் கூற மற்றவர்கள் தலையாட்டினார்கள்.

"இந்தப் பெண் யார்?" என்று சொக்கன் வினவினான்.

இம்முறை சற்று கடுமையாக "சொல்ல முடியாது" என்றான் வீரர் தலைவன்.

"இவள் என்ன குற்றம் செய்தாள்?" என்று வினவினான் சொக்கன்.

"சொல்ல முடியாது" வீரனின் பதில் திட்டமாயிருந்தது.

"சரி நீங்கள் போகலாம். இவளை நான் கவனித்துக் கொள்கிறேன்." என்ற சொக்கனைப் பார்த்து "என்ன தைரியத்தில் எங்களைத் தடுக்கிறாய்?" என்று கோபமாக கேட்டான் வீரர் தலைவன்.

ஒரு முறை மீண்டும் எதிரே கிடந்த பெண்ணை நோக்கியபடி "எனது தைரியம் இதில் ஏதுமில்லை. என் கடமையைச் செய்கிறேன். என் பொறுமை எல்லை மீறுமுன் சென்றுவிடுங்கள்" என்றான் சொக்கன்.

"இந்தப் பெண்ணிடம் உனக்கு என்ன கடமை?" என்று சீறினான் வீரர் தலைவன்.

"என் முன்னே ஆதரவற்று அடைக்கலமாக வீழ்ந்து கிடக்கும் இவளைக் காக்கும் கடமை என்றான் சொக்கன் நிதானமாக அந்தப் பெண்ணையே பார்த்தபடி

"என்ன திமிர் உனக்கு நகர்ந்து நில். நீ இந்த நாட்டு மன்னனா எனக்கு உத்தரவிட. எங்களை மேலும் தடுத்தால் உன் உயிர் அரைக்காசு பெறாது" என்று சினம் தலைக்கேறியதால் நிதானமிழந்து பேசியபடி சொக்கனை நோக்கி வாளை ஓங்கினான் வீரர் தலைவன்.

அடுத்த விநாடி மின்னல் வேகத்தில் நிகழ்ச்சிகள் அரங்கேறியது. வீரனின் ஓங்கிய வாள் கீழே இறங்கவில்லை. பேசவும் சக்தியில்லாமல் அவன் வேரறுந்த மரம் போல் மல்லாந்து விழுந்தான். அதே சமயத்தில் மரண உடன்படிக்கை செய்து கொண்டது போல் முன்னால் நின்ற இருவீரர்களும் தட் தட் என்று மண்ணில் சாய்ந்தனர். தன் மூன்று குறுவாட்களையும் ஒன்றன் பின் ஒன்றாக வீசி கணநேரத்தில் வீரர்களை மாய்த்துவிட்ட அவனைக் கண்டு மீதியிருந்தவர்கள் பின்னடைந்தனர்.

திடீரென்று வீரர்களின் பின்னால் சிவந்த பெரும் புரவி மீது வீரன் ஒருவன் வருவதைக் கண்ட வீரர்கள் விலகி நின்று புதிதாய் வந்தவனைத் தலை வணங்கினர். புரவியை மிக மெதுவாக செலுத்திக் கொண்டு வந்தான் அந்தப் புதியவன்.

குனிந்து மண்ணில் வீழ்ந்திருந்த அந்தப் பெண்ணை பார்த்துக் கொண்டிருந்த சொக்கனை நோக்கி "ஏய் யார் நீ? இந்த அழகிரி நாயக்கனின் வீரர்களை எதிர்க்கும் துணிவு உனக்கு யார் கொடுத்தது" என்று வினவியபடி தன் நீண்ட வாளால் குத்தி குனிந்திருந்த சொக்கனின் முகத்தை நிமிர்த்த முயன்றான்.



மெதுவாகத் தலையை உயர்த்திய சொக்கனின் முகத்தைக் கண்டு "ஆ...." என்று ஏதோ பேயைப் கண்டவன் போல் மிரண்டு பின்னடைந்தான்.

"மயக்கம் தெளிந்ததும் அவள் வந்தால் அழைத்துச் செல்" என்று உறுதியான குரலில் கூறினான் சொக்கன்.

ஆனால் அழகிரி நாயக்கனோ தன் வீரர்களை அங்கிருந்து செல்லும்படி சைகை செய்துவிட்டு வேகமாக தன் புரவியைத் திருப்பிக் கொண்டு சென்று விட்டான்.

மதுரை நாயக்கரின் வீரர்களால் துரத்தப்பட்டு தன் முன்பாக விழுந்து கிடந்த அந்தப் பைங்கொடியின் பூவுடலை லேசாகத் திருப்பி முகத்திலும் கொஞ்சம் நீரைத் தெளித்தான். விண்ணிலிருந்து வீசப்பட்ட தேவதை போல் மண்ணில் அரைவாசி குப்புறக்கிடந்த அந்த பருவமங்கையின் உடலைப் புரட்டியதும் பிறகு கண்ணியம் குறையாமல் கலைந்து கிடந்த அவள் மேலாடையைச் சரிசெய்தான்.

யார் இவள்... இவர்களிடம் எப்படி சிக்கிக் கொண்டாள் என்று எண்ணியபடி மல்லாந்து கிடந்ததால் அவள் தாமரை மொட்டுகளைக் கண்டு நிலைகுலைந்தான் வாலிபனான சொக்க நாதன். நீரைத் தெளித்ததால் கண்மலர்களை அகல விரித்த அந்தப் பெண்ணின் கண்களில் தெரிந்த ஆணையால் சிறிது எச்சரிக்கையும் அடைந்தான்.

அந்தச் சமயத்தில் பல்லக்கு பரிவாரங்களுடன் அருகிலிருக்கும் அம்மன் கோயிலுக்கு யாரோ அரச பரிவாரங்கள் வரும் சத்தத்தில் கீழே கிடந்த அவள் முகத்தைக் குனிந்து பார்த்தான். அவளும் அந்த ஒலிகளை உணர்ந்தவள் போல் மீண்டும் மயக்கத்தினால் கண்களை மூடிக்கொண்டாள்.

இனி என்ன செய்வது வருபவர்கள் யார் இந்தப் பெண்ணுக்கு வேண்டியவர்களா? எதிரிகளா? என்ன நடந்தது..(தொடரும்)

அடுத்த மாதம் பார்க்கலாம் நட்பூக்களே...



பயணம்: 2 பதிவு: 3

“ஹெரிட்டேஜர்” தமிழ் இதழினை, தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சார்பாக, மின்னிதழாக வெளியிடுவோர், இராஜசேகர் பாண்டுரங்கன்.

இந்த இதழின் நோக்கம், மரபு சார்ந்த செய்திகளைப் பகிர்தல் மட்டுமே. மற்ற எவ்வித ஆதாய நோக்கமும் இல்லை.

ஹெரிட்டேஜர் தமிழ் இதழ்,
தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம்,
26, முதல் தெரு, ராமலிங்கா நகர்,
நெற்குன்றம்,
சென்னை. 600107
தொலைப்பேசி: 9786068908

கட்டுரைகளை அனுப்ப:
news@heritager.org

முந்தய இதழ்கள்: goo.gl/AeBzaa




அட்டைப்படம்:
திபெத் குடியிருப்பு

படம்: வேலுதரன்




# வாசகர்கள் உதவிக்கரம் அளிப்பீர்



Donate

யானையை வழிநடத்தும் கூர்மையான அங்குசம் போல, இதழை வழிநடத்தத் தொடர்ந்து அறிவுரைகளை வழங்கி ஊக்கமளித்துவரும் திரு. AT. மோகன், திரு. வேலுதரன், திரு. சரவணராஜா, முனைவர். பிரின்ஸ் தாஸ் மற்றும் முன்னாள் இந்நாள் எழுத்தாளர் சகோதரர்கள் அனைவருக்கும் மின்னிதழ் சார்பாக எங்கள் நன்றிகள்.










UPI ID: 9786068908@ybl

# முதுபெரும் கலைஞருடன் ஒரு சந்திப்பு

## இராசு. சரவணன் ராஜா, வேலூர்

நாம் செல்லும் ஆலய கோபுரங்களின் மேலே அமைந்த கலசங்கள், கருவறை வாயிற்படியிலும் பக்கத் தூணிலும் போர்த்தப்பட்டுள்ள வேலைப்பாடுடைய தகடுகள், கருவறையில் உள்ள திருமேனிகளை அலங்கரிக்கும் பொன், வெள்ளி அல்லது பித்தளையிலும் உள்ள கலசங்கள், பிரபை என்று சொல்லப்படுகின்றன. திருவாசி எனப் பல உலோகத்தில் ஆன உருவங்கள் நிச்சயம் நம் கண்ணில் தென்படும்.

ஏற்கனவே எந்த நூற்றாண்டிலோ, ஏதோ ஒரு சிற்பி செய்த சிலைகளுக்கும், தூண்களுக்கும், படிகளுக்கும் இன்று உலோகத்தால் ஆடையாகப் போர்த்தப்பட்டு, அதே கலை நுணுக்கங்களோடு செய்பவர்கள் யார் என்று எப்போதாவது யோசித்திருப்போமா?!

வேலூர் பாலாற்றங்கரையில் அமைந்துள்ள விருதம்பட்டில் உள்ள சுவாமிநாதன் ஸ்தபதியார் என்றால் வடஆற்காடு மாவட்டம் மட்டுமல்லாமல் வெளிமாநிலத்திலும் நன்கு தெரியக்கூடிய ஸ்தபதி. இவர் சிலை வடிவமைப்பவர் அல்ல. ஆனால் மற்ற சிற்பிகள் செய்த சிலைகளுக்கு கச்சிதமாகக் கலசங்கள் செய்பவர். இன்றும் தன் 87 வயதிலும், நாள் தவறாமல், ஏதோ ஒரு கருவறையில் உள்ள தெய்வ சிற்பத்துக்குக் கசவம் செய்யும் பணியை விடாமல் தொடர்கிறார். நமது ஹெரிட்டேஜர் இதழ்க்காக ஒரு பிரத்யேக நேர்காணல்.

*1. கருவறையில் உள்ள சிலைகள் மேல் ஏன் கவசங்கள் தேவை?*

கவசங்கள் தான் சிலைகளின் உருவத்தை மேலும் அழகாக்கிக் காட்டும். பூஜையில் கூட சிறு பின்னங்கள் வராமல் பாதுகாப்பாக வைத்திருக்கும்.

*2. எந்த உலோகங்களில் கவசங்கள் செய்வீர்கள்?*

தங்கம், வெள்ளி, தாமிரம், பித்தளை போன்ற உலோக தகடுகளில் பெரும்பாலும் உபயோகப்படுகின்றது. சிறிய சிலைகள் என்றால்



முழுவதும் கவசமாகவும், பெரிய சிலைகள் என்றால் முடி, கர்ணபத்திரம், கைகள், மார்பு, கால், மனம் எனத் துண்டுகளாக செய்யப்படும். நிதிவசதியைப் பொறுத்து உலோகம் மாறுபடும்.

*3. உங்களுக்கு இந்தப் பணியை அளிப்பவர்கள் யார்?*

ஆலய நிர்வாகிகள் மூலவருக்குக் கோயில் சார்பாகக் கவசம் செய்கிறார்கள், மேலும் பக்தர்கள் தங்கள் பிரார்த்தனைகளுக்காக கவசம் செய்ய வருவார்கள். புதிய ஆலயம் கட்டுபவர்களும் தங்களுக்கு வேண்டிய அளவைக் கூறி பெற்றுச் செல்வார்கள்.

*4. உங்களுடைய பிறந்த ஊர், குலத்தொழில் பற்றிய விபரங்களைக் கூறுங்களேன்?*

நான் பிறந்தது திருமுருகன்பூண்டி திருப்பூர் இடையில் உள்ள அனுப்பம்பாளையத்தில். அப்பா முருகப்ப ஆசாரியின் தொழில் பாத்திரங்கள் செய்வதுதான். ஒரு கட்டத்தில் பாத்திர தொழில் குறைந்ததால், குடும்பத்தோடு வேலூருக்குத் தொழில் செய்ய வந்துவிட்டோம். அப்பாவுக்குத் தொழிலில் உதவுவதற்காக நான்காம் வகுப்பிலேயே படிப்பைவிட்டபோது என் வயது பத்து. பட்டறையில் உதவியாய் இருந்துகொண்டே எனது 12 வயது முதல் தனியாக பாக்கு தட்டுகள், தாம்பூல தட்டுகள் என உருவாக்க ஆரம்பித்தேன். 1935ல் என் அப்பா பட்டறையில் 25 முதல் 30 பேர் வரை பணியிலிருந்தனர். சில ஆண்டுகளில், வேலூரிலும் பாத்திர தொழிலில் ஒரு மந்த நிலை ஏற்பட்டது. மூலப் பொருள் கிடைப்பதில் தட்டுப்பாடு, தொழில் போட்டி, மேலும் புதிய தலைமுறையிடம் தொழில் ஆர்வமில்லாததும்...

*5. கலசங்கள் செய்யும் தொழில் தொடங்கிய திருப்புமுனையை பற்றிச் சொல்லுங்களேன்?*

எனது நண்பர் சுந்தரமூர்த்தி குருக்கள், காங்கேயநல்லூரில் அர்ச்சகர். அவ்வூர் முருகன் கோயிலுக்குப் படித்தகடு போடும் வேலைக்கு ஏற்பாடு செய்துதந்தவர். அதுதான் என் முதல் தெய்வப்பணி எனச் சொல்ல வேண்டும். அதே காலகட்டத்தில் வேலூர் தோட்டப்பாளையம் பிள்ளையார் கோயிலின் விநாயகர் திருமேனிக்கு வெள்ளிக்கவசம் செய்யும் வாய்ப்பு ஆலய நிர்வாகி வடிவேல் மூலமாகக் கிடைத்தது.

அந்த முதல் கவசம் செய்த அனுபவம் மிகவும் சுவாரஸ்யமானது. அப்போது அருகேயுள்ள இரத்தினகிரி முருகன் ஆலயத்துக்குக் கவசங்கள், படித்தகடுகள், தேர் எல்லாம் செய்து தரும் வேலைக்காக பழனியிலிருந்து





ஒரு பிரபல ஸ்தபதியை வரவழைத்து அவரிடம் இந்த வேலைகளை ஒப்படைத்திருந்தார்கள்.

என்னுடைய முதல் விநாயகர் கவசத்தை ஒருமுறை பார்த்து ஆலோசனை சொல்லி வழிகாட்ட வேண்டும் என்று கோரினேன். பலமுறை அழைத்தும் அவர் வர மறுத்த காரணத்தால், நான் வேலூர் ஜலகண்டேஸ்வரர் ஆலயத்தில் உள்ள சிற்ப நுணுக்கத் தூண்களை பார்த்துப் பார்த்து காகிதத்தில் குறிப்பெடுத்து கொண்டு வந்து என் முதல் கவச வேலையை முடித்தேன். பார்த்த எல்லோரும் நன்றாக இருக்கிறது என்று உற்சாகப்படுத்தினார்கள். கிறிஸ்துவ, இஸ்லாமிய நண்பர்கள் உட்பட...

இன்றைக்குப் பல நூறு கவசங்கள் செய்த நிலையிலும் தன் கன்னி முயற்சியான முதல் விநாயகர் கவச அனுபவத்தை சொல்லும்போதே









நெகிழ்கிறார் ஸ்தபதியார். இவர் கைவண்ணத்தில். அதே இரத்தினகிரி கோபுரங்களில் இன்று கலசங்கள் மின்னுகின்றது.

6. கவசங்கள் செய்யும் முறையைப் பற்றி விபரமாய்க் கூறுங்களேன்?

உருக்கிச் செய்யும் பஞ்சலோக விக்கிரகங்கள், கல்லில் செதுக்குகின்ற விக்கிரகங்கள் போலவே இந்தக் கவசங்கள் செய்யும் பணியும் மிகவும் சிரம சாத்தியமான வேலை.

முதலில் கவசம் செய்ய வேண்டிய மூல விக்கிரகத்தின் மீது நல்லெண்ணெய் துணியால் ஒற்றிப் பூச வேண்டும். தேன் மெழுகும், குங்கிலியமும் சேர்த்து கொதிக்கும் வெந்நீரில் போட்டு கையில் நன்றாகப் பிசையும் பக்குவத்தில் உள்ள மெழுகைத் தயாரித்து அதை அப்படியே இளஞ்சூட்டோடு எடுத்து மூலவர் சிலையின் மீது அப்பி அந்த மெழுகுத் தட்டையின் மீது தண்ணீரை ஊற்றிக் குளிர்விக்க வேண்டும். இதன் பின்னர், மெழுகுப் படிமத்தை சிலையின் மேலிருந்து அப்படியே ஓடாகப் பெயர்த்து எடுக்கமுடியும். பின்னர் இந்த மெழுகுவார்ப்பை உடையாமல் அதனுள் சிமெண்ட் கலவையை மெல்ல மெல்ல நிரப்பவேண்டும். சிமெண்ட் கலவை நிரம்பிய மெழுகு வார்ப்பு அப்படியே 15 நாட்கள் இருக்கும். அதற்குள் உள்ள சிமெண்ட் நன்றாகக் கெட்டி ஆகிவிடும். இப்போது மூலவிக்கிரகத்தின் பிரதி எடுத்த மாதிரி சிமெண்டில் கிடைத்துவிடும்.

இதன் பிறகுதான் ஸ்தபதியின் வேலைத்திறன் பளிச்சிட வேண்டிய தேவைகள் அதிகம். சிமெண்டில் கிடைக்கும் திருமேனியைத் தரையில் வைத்து அதன் அளவை அளந்து அதன் மீது வெள்ளி தகட்டை காய்ச்சி, உளிகளாலும், சுத்தியலாலும் அடித்து முகம், மார்பு, கைகள், ஆபரணங்கள், கிரீடம் எனத் துல்லியமாக இல்லாமல் ஓரளவு வடிவம் கிடைக்கும் வரை அதை உருவாக்க வேண்டும். இந்தக் கவசத்தை மீண்டும் மூலவர் சிலை மேல் வைத்துப் பார்த்து அதன் நிறை குறைகளை கணித்து அதை தட்டி பொறுத்தும் அளவை உறுதியாக்க வேண்டும்.

மீண்டும் பணிமனைக்கு எடுத்து வந்து இந்தக் கலச தகட்டுக்குள் மறுபடியும் ஒரு கலவையை நிரப்ப வேண்டும் (குங்கிலியம், சீமைஓட்டுதூள், கடலெண்ணெய் கலந்து பதப்படுத்திய கலவை) கவசத்துக்குள் இந்த அரக்கு கலவைப் போய் நன்றாகப் படிந்து ஆறியதும் வெள்ளி தகட்டை விதவிதமான உளிகளைக் கொண்டு அழுத்தி, அடித்து, கண், காது, மூக்கு, பூ அலங்காரம், அணிகலன்கள் எல்லாம் துல்லியமாக உருவாக்க வேண்டும். இதற்கு நகாசு வேலை என்று பெயர். பின்னர் கலச தரம் வெள்ளி கம்பியை சுற்றிப் பற்ற வைக்க வேண்டும். கவசம் நெளியவோ, நசுங்குவதையோ இது தடுத்துவிடும். கம்பி கட்டுதல் முடிந்த பின் நன்றாக பாலிஷ் செய்து துடைத்துவிட்டால் ஜொலிக்கும் கவசம் தயார். எல்லாவித உலோகத்துக்கும் செய்முறை இப்படிதான்.

7. தூண்கள், படிகள், பிரபைகள் போன்றவற்றின் உருவாக்கம் எப்படி?







கருவறை படிகள், தூண்கள் போன்றவற்றுக்கும் இதே போல் ஏற்கனவேயுள்ள சிற்ப வேலைகளை மெழுகில் நகல் எடுத்து வந்து கவசம் செய்ய வேண்டும். பிரபைகள் என்கிற திருவாசிகளை முழுக்க முழுக்க கற்பனையை உபயோகித்தே வடிவமைக்கப்படுகின்றது. பல ஆலயங்களில் உள்ள பிரபை வடிவங்களைப் பார்த்து மனதில் பதியவைத்துக் கொண்டு கற்பனையைக் கலந்து கைதிறமையில் கலந்து செய்ய வேண்டும். மனமும், கைகளும் இணைந்து உருவாக்கும் பணி இது.

*8. கோபுர கவசங்கள் செய்முறை பற்றி விளக்கமாகக் கூறவும்?*

ஒவ்வொரு கலசமும், பீடம், சிகரம், மையப்பகுதி என்று மூன்று பகுதிகளாக உட்புறம் கூடாக செய்யப்படும். இந்தப் பகுதிகளை மையத்தில் ஒரு குழாய் சேர்த்துப் பிணைக்கும். கோபுர கலசங்கள் பித்தளையிலும் தாமிரத்திலும் தகடுகளை வெட்டி வளைத்துப் பற்றவைத்து செய்யப்படுகின்றன.
இந்த கலசக் கூட்டுக்குள் வரகு என்னும் தானியம் நிரப்பி வைக்கப்படும். நவரத்தின கற்கள் போடும் உபயதாரர்களும் உண்டு.

இந்த வரகும், கலசமும் அண்டவெளியிலிருந்து ஆற்றலை ஈர்த்து மூலவருக்கும், வரும் பக்தர்களுக்கும் தருவதாக ஒரு நம்பிக்கை.

*9. தங்களின் 45 வருட அனுபவத்தில் எத்தனைக் கவசங்கள் செய்து இருப்பீர்கள்? தங்களைக் கவர்ந்த கவசம் பற்றி சொல்லுங்களேன்?*

நான் இதுவரை செய்த கவசங்கள், கலசங்கள், பிரபைகள், படிகள் என எதையும் கணக்கெடுத்து வைக்கவில்லை. ஆயிரங்களைக் கடந்து இருக்கும் என்பது மட்டும் நினைவு. என்னைக் கவர்ந்த கவசம் எது என்றால் தஞ்சாவூர் மாவட்டம், திருவீழிமிழலை - வீழிநாதர், காத்தியாயினி அம்மன் மேல் உள்ள கவசம் தான் மிகச் சிறப்பான வேலைப்பாடு உடையது. அந்த ஆலய விமான வேலைப்பாடுகளும் அற்புதமானவை. அங்கே உள்ள கல்யாண மண்டபம் கட்டியது இராஜராஜன், என்கிறார் ஸ்தபதியார்.



முருகன் கவசத்தின் மீது பல்வேறு உளிகள், சுத்தியல் கொண்டு வெள்ளி தகடுகள் மீது ஸ்தபதியாரின் கரங்கள் விளையாடுகின்றன. பூக்கள், அணிகலன், யாளி, மகரமீன் என்று வெறும் தகட்டில் அவருடைய கற்பனைக்கேற்ப பூத்துக் கொண்டே வருவது தனி அழகு தான்.

கற்பனை வளமும், கை திறனும் தான் சுவாமிநாத ஸ்தபதியாரின் பிரதான மூலதனம். அதற்கு மேல் இறைவனின் அருட்பார்வையும். அவருடைய தொழில் கூடம் தெய்வீக மனம் கமழ்கின்றது என்பது சம்பிரதாயத்துக்குச் சொல்லவில்லை. சிறியதாக ஒரு ஆலயம் அமைத்து அதில் விஷ்ணு துர்கையைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

நவராத்திரி அன்று சோழர்கால சிற்ப தோற்றத்தில் இருக்கும் அம்மன் தங்க கவசத்தில் காண்பதற்கு வெகு அற்புதமான காட்சி.

மிகுந்த வரலாற்று ஆர்வம் உடையவர், பல்வேறு ஆலய கருவறையுள் உள்ள மூலவர்களைத் தொட்டு அளவெடுத்து கவசங்கள் செய்த பாக்கியவான், 87 வயதிலும் ஓய்வெடுக்காமல் தினமும் சுறுசுறுப்பாகப் பணியில் இருப்பவர், சிறு வயதில் பல கஷ்டங்கள் அனுபவித்ததை இன்று வரை மறக்காமல் இருப்பதாலேயே அவர் இந்தத் தொழிலை மிகச் சிறப்பாக, நேர்மையாகவ் செய்வதாக கூறலாம். (முற்றும்)



# தமிழர்களின் தொன்மையைப் போற்றும் தொல்லியல் திருவிழா

பருவாசி ரகுநாத், மதுரை

பசுமை நடை பற்றிச் சொல்ல வேண்டும் என்றால் பசுமை நடை மதுரையுடைய சின்னமான யானைமலையைச் சிற்ப தலைநகரமாக மாற்ற வேண்டும் என்பதே. ஆனால் அரசு அந்த மலையை கிரானைட் மாஃபியாவுக்கு கைமாற்றிவிடப் போகும்போது அந்த ஊர் மக்கள் போராடியதன் விளைவாக தற்போது அந்த யானைமலை பாதுகாக்கப்படுகிறது. அதைப் பற்றி முத்துகிருஷ்ணன் வந்து உயிர்மெய்யில், "யானைமலையைச் சூழ்ந்த தீவினை" என்ற கட்டுரை எழுதினார். அந்தச் சமயத்தில் நடந்த புத்தக திருவிழாவில் அந்தக் கட்டுரை புழங்குகிறது. அந்தக் கட்டுரையின் பலனாக நண்பர்கள் 15, 30 பேர் சேர்ந்து அந்த மலையை நம்ம போய் பார்க்கலாமா என்ற எண்ணத்தில் எழுந்ததுதான். அன்று சின்ன பயணமாகப் போனதுதான் அந்த முதல் நடைப்பயணம். 18.9.2010ல் அப்படியொரு நடை எந்தவொரு எதிர்பார்ப்பும் எந்தவொரு தொலைநோக்கு திட்டமிடலும் இல்லாமல் ஒரு நடை போய்வந்தோம்.

அந்த நடை முடிவில், திரு. சுந்தரகாளி அவர்களின் உரை, அந்த மலைப் பிரசங்கத்தின் விளைவு, அடுத்தடுத்த நடையை நோக்கி நகர்த்தியது என்பதுதான் உண்மை. அப்படியான ஒரு நடை தான் பசுமை நடை.

பசுமை நடை இன்றைக்கு 100ஐ கடந்திருக்கிறது. அதுதவிர மதுரை மக்களின் வருகையால்தான், ஒரு நிகழ்வு நடக்கிறதென்றால், அந்த நிகழ்வு 10 பேரோ 5 பேரோ தொடர்ச்சியாக வந்தால் மட்டுமே தொடர்ந்து நடக்கும். இன்றைக்கு நீங்களும் நானும் ஒரு கூட்டம் போட்டால் நீங்களும் நானும் மட்டுமே உட்கார்ந்து ஒரு விஷயத்தை பேச முடியாது. நீங்களும் நானும் மட்டுமே ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து பேச முடியாது. அதற்கான புதுமுகம் அடுத்தடுத்த கட்டத்தில் வரும்போது மட்டுமே, போகும் தூரம் நமக்குத் தெரியும். மதுரை மக்கள் வந்து ஒரு தீவிர ஆர்வத்தோடு பங்கேற்று கொண்டது மறக்க முடியாத விஷயம். அவர்களால்தான் இந்த பசுமை நடை 100ஐ கடந்துவிட்டது.

மக்களுடைய வருகை இல்லையென்றால் எந்த ஒரு நிகழ்வும் அது நிகழாது. மக்கள் அதிகமாகப்

பங்கேற்றதன் பலனாக, நமது நடையை தொடர்ந்து கொண்டுபோக வேண்டும் இன்னும் போகவேண்டும் என்ற உத்வேகத்தை கொண்டுவந்தது. பசுமை நடை மட்டுமல்லாமல் மதுரையில் நடந்த கீழடியில் தொல்லியல் அகழாய்வுகள் நடந்ததன் பலனாக எத்தனையோ நடைகள் போயிருக்கிறோம். ஆனால் கீழடி அகழாய்வுக்கு வந்தவர்களின் எண்ணிக்கை அதிகம்.

கீழடியில் 3 கட்டமாக அகழாய்வு பணிகள் நடைபெற்றது. அகழாய்வு பணி நடைபெறும் போது 3 நடைகள் போயிருந்தோம். 3 நடையிலும் வழக்கமாக நடையைவிட அதிகமாக எண்ணிக்கையில் மக்கள் கலந்துகொண்டார்கள். ஏனென்றால் கீழடி குறித்தும், அங்கு நடக்கும் தொல்லியல் குறித்தும் மக்களுக்கு ஒரு ஆர்வமும் ஈடுபாடும் ஏற்பட்டதே. மதுரை மக்களுக்கு மட்டுமல்லாமல் மதுரையைக் கவனித்து கொண்டிருக்கும் வெளியூரில் வாழும் மக்களுக்கும், வெளிநாட்டில் வாழும் மக்களுக்கும் ஒரு பெரிய ஈடுபாடு இருந்து கொண்டிருக்கிறது.

மதுரை மக்களுக்கும், மதுரையைச் சுற்றியுள்ள மக்களுக்கும், மதுரையைச் சாராத வேறு மாநிலங்களில், வேறு மாவட்டங்களில் வசிக்கக் கூடிய மக்களுக்கும் மதுரை வரலாற்றையும் தொல்லியலையும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தினால் அதனைப் பெருமையாக கவனித்து வருகிறார்கள் என்பதை அறிந்தே 100வது நடையை தொல்லியலை மையப்படுத்தி "தொல்லியல் திருவிழா"வாக அறிவித்தோம்.

அதற்கு முன்னால் மதுரையில் 25வது பசுமை நடை யை விருட்சத்து விழாவாக நடத்தினோம். மரம் சார்ந்து நடந்தது 40வது பசுமை நடை பாறை



திருவிழா. பாறை ஓவியங்கள், பாறையில் இருக்கக்கூடிய கல்வெட்டுகள், பாறையில் இருக்கக்கூடிய சமய சின்னங்கள், சின்ன சின்ன வரலாற்றுத் தொல்லியல் சின்னங்கள் வரை அவற்றை முதன்மைப்படுத்த வேண்டும் என்ற நோக்கமே பாறை திருவிழாவாகக் கொண்டாடினோம்.

50வது பசுமை நடை நீர்நிலையைச் சார்ந்து பழங்காலத்தில் இருக்கக்கூடிய கண்மாய்கள், ஊரணிகள், மடைகள் அதுபோக ஏந்தல்கள், ஏரிகள் இப்படியாக விஷயங்கள் எப்படி வரலாற்றில் எப்படி இருந்தது? அதை நம் எப்படி அழித்துக் கொண்டிருக்கிறோம். அதை மையப்படுத்தி நீர்மன்றல் என்ற நடை 50வது நடையை ஒரு விழாவாகக் கொண்டாடினோம். அதற்குப் பிறகு தொல்லியல் திருவிழாவாக நடத்தினோம்.

தொல்லியல் திருவிழா 10.2.2019 அன்று ஞாயிற்றுக்கிழமை நடந்தது. பல சிறப்பு விருந்தினர்கள் கலந்து கொண்டனர். தேதி மாற்றம் வேறு இருந்தது. ஜனவரி 27ம் தேதி நடைபெற வேண்டிய திருவிழா பிரதமர் மதுரைக்கு 10 கி.மீ. தூரத்தில் உள்ள





தோப்பூரில் நடக்கும் அடிக்கல் நாட்டு விழாவிற்கு வருவதால் அனுமதி கிடைக்காததால் பிப்ரவர் 10 தேதிக்கு மாற்றினோம். அது நல்ல முகூர்த்த நாள். அன்றைய தேதியில் சிறப்பு விருந்தினர்கள் அனைவரும் வருவார்களா என்ற கேள்விக்குறி. ஆட்கள் வருவார்களா வரமாட்டார்களா என்ற ஐயப்பாடு. ஆனால் அனைத்துச் சிறப்பு விருந்திகர்களும் கலந்துகொண்டார்கள். அதே போல அந்த நடை வழக்கமான நடைபோல இல்லாமல் "100வது நடை" நடத்தினோம். கூட்டம் நிரம்பி வழிந்தது. சாதாரணமாக முகூர்த்த நாளில் "பசுமை நடை" வைப்பதில்லை. அப்படி வைத்தால் கணிசமான மக்கள் வரமாட்டார்கள். ஆனால் 100வது நடைக்கு அவ்வளவு மக்கள் வந்ததால் திக்குமுக்காடி போனோம்.

காலை இராமலிங்கம் அய்யாவுடைய கருத்துரை. "பசுமை நடை" மதுரை நடையோட 6வது பதிப்பை வெளியிட்டோம். மதுரை சார்ந்த தொடர்ச்சியாக வரக்கூடிய முக்கியமான ஒருவர் சித்தரைவீதிக்கரன் என்று சொல்லக்கூடிய சுந்தரர் மதுரையைப் பற்றிய புத்தகம் "திருவிழாக்களின் தலைநகரம் மதுரை" என்ற அவருடைய நூல் வெளியிடப்பட்டது.

மதுரைக்குள் நடக்கும் இந்துமத, கிருத்துவ மத, இஸ்லாமிய மத, சமண மத அனைத்து மதச்சார்பற்ற நூலாக, திருவிழாக்கள் சார்ந்த நூலாக, திருவிழாவில் சுற்றி திரிந்த, திருவிழா கூட்டத்திலிருந்து பெறப்பட்ட அரியத் தகவல்களுடன் வெளிவந்திருக்கிறது. காலை 9 மணிக்குக் காலை உணவுடன் நிறைவடைந்தது.

மாலை 4 மணிக்கு மதுரை உலக தமிழ சங்கம் அருகிலுள்ள வாளகத்தில் தொல்லியல் திருவிழா கோலாகலமாக நடைபெற்றது.

முதல் நிகழ்ச்சி சிலம்பாட்டம். சிலம்பாட்டம் முடிந்ததும் திரு. ஆர். பாலகிருஷ்ணன், இந்திய ஆட்சிப் பணி, சிந்துவெளி பண்பாட்டு ஆய்வாளர் எங்களுடைய கீழடியில் எடுக்கப்பட்ட பொருட்களின் புகைப்பட கண்காட்சி சர்வதேச அளவில் பிரிண்ட் செய்து காட்சிப்படுத்தினோம். அதை அவர் திறந்துவைத்தார்.

வாழ்த்துரை உயர்நீதிமன்ற நீதிபதி ஜி.ஆர். சுவாமிநாதன் அவர்கள் திரு. டேவிட்சன் தேவாசீர்வதாம், மாநகர காவல் ஆணையர், டாக்டர் என். வெங்கடேச போஜன், கண் மருத்துவமனை நிர்வாக இயக்குநர், திரு. ந. நடராஜன், இணை ஆணையர், அருள்மிகு மீனாட்சியம்மன் திருக்கோயில். காலையில் வராதவர்களுக்காக மீண்டும் இரண்டு நூல்கள் வெளியிடப்பட்டது.



1000 முதல் 1500 பேர் கலந்துகொண்டு இன்ப அதிர்ச்சி அளித்தார்கள். இரவு 9.00 மணி வரை தொடாச்சியாக புகைப்பட கண்காட்சி கண்டுகளித்து உரையையும் கேட்டார்கள்.



நிகழ்ச்சியின் வெற்றியால் மனநிறைவு ஏற்பட்டது. தொல்லியல் சார்ந்த செயல்பாடுகளையும் தொல்லியல் சார்ந்த தேடல்களை பசுமை நடை வளப்படுத்த பெருமைப்படுகிறோம்.

பசுமை நடையைப் பற்றி "ஹெரிட்டேஜர் இதழில்" பதிவு செய்வது மிகுந்த மகிழ்ச்சியாக இருக்கிறது. பசுமை நடை அன்பையும், மகிழ்ச்சியையும் தெரிவித்து கொள்கிறது. பசுமை நடையோட வெற்றி இந்தமாதிரியான நபர்களால்தான் ஆனது. மதுரை மற்றும் மதுரை சார்ந்த பகுதியில், தமிழகம் முழுக்க இருக்கக்கூடிய உங்களைப் போன்ற வரலாற்று ஆர்வலர்களால் தான் பசுமை நடை இவ்வளவு பெரிய வெற்றி தக்கவைத்தது என்கிறேன்.





# வழுதி கண்ட தென்காசி பெருங்கோபுரமும்

## — பொன் கார்த்திக்கேயன்

வரலாறு குறித்து தேடத் தொடங்கிய போது எங்கெல்லாமோ தேடி அலைந்துவிட்டு சொந்த ஊரில் வாளாவிருக்கிறோமே என்ற குறை அடிக்கடி இருந்துவந்தது. ஒவ்வொரு முறை ஊருக்குச் செல்லும் போதெல்லாம் தூங்கி எழவே பொழுது சரியாயிருந்தது.

இம்முறை எப்படியேனும் காசி கண்ட பெருமாள் பராக்கிரம பாண்டியனது சிற்பத்தையும் தென்காசிப் பாண்டிய இலச்சினை (இரட்டைக் கயல்) யையும் காண வேண்டுமென்ற நோக்கில் நானும் எனது சகோதரனும் சென்றோம்.

முப்பெரும் வேந்தருள் ஒருவராயிருந்து பின் தம் குலப் பெருமை தாழ்ந்ததால் தெற்கே இடம்பெயர்ந்து தென்காசியினைத் தலைநகராக்கிக் கொண்டு தென்பாண்டி நாட்டினை ஆண்டோர் தென்காசிப் பாண்டியர் என்னும் பெயர் கொண்டு குறிப்பிடப்படுவோராவர். அக்குலத்தில் தோன்றிய சிறந்த மன்னவனாக அறியப்படுவான் ஜடிலனான பொன்னின் பெருமாள் எனும் பெயருடைய பராக்கிரம பாண்டியனாவான். இவன் " பூமிசை வனிதை மார்பினில் பொலிய" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தி கொண்டவன்.

இறைவன் தனது கனவினில் தோன்றி தான் உத்தர காசியில் இருந்த இடம் சிதைந்து போனதாலயே தனக்கு தக்ஷிண காசியாக ஆலயம் செய்து தர வேண்டுமென கேட்டுக் கொண்டமையாலே சித்ரா நதிக்கரையிலே பார் போற்றும் தக்கண காசியினை விசுவநாதன் மகிழ்ந்திருக்க நிர்மாணித்தான்.

இக்கோவிலாலேயே செண்பகப் பொழிலென பெயர் பெற்றிருந்த நகரம் தென்காசி என்றானது. இவனது மெய்க்கீர்த்தி வரிகளும் தென்காசிப் பெருங்கோவில் செய்வித்ததை அவனது சாதனைகளுள் ஒன்றாக விவரிக்கின்றன.





அக்கோவிலின் இராஜகோபுர கட்டுமானத் தொடக்கமும் இவனது காலத்தேயே தொடங்கியது. ஒன்பது நிலைகளைக் கொண்டதாக கட்டப்பட்ட இக்கோபுரச் சுவர்களின் இரு புறங்களிலும் அரசேறிய பாண்டிய மன்னர்களின் புகழையும் காலத்தையும் குறிப்பிடும் வடமொழிக் கலப்பில்லாத தமிழ்ப் பாடல் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

கோவில் கட்டுமானம் 1446லேயே தொடங்கி விட்டாலும் கோபுரக் கட்டுமானம் 1457ல் பராக்கிரம பாண்டியனால் தொடங்கப்பட்டதை ஓர் பாடல் கல்வெட்டு தெரிவிக்கின்றது. கலியுக வருடம் 4558( 1457) ல் கார்த்திகை ஐந்தாம் தேதி திருக்கோபுரத்தின் உபானப் பகுதி கட்டுமானம் தொடங்கப்பட்டது.

"வடிவெழு தொணாத பராக்கிரம மகிபன் சொன்ன வரை போற் திருக்கோபுரமுங் காணத் துடியிடையா யுபானமுதல் துடங்கினானே"

இக்கோபுரந்தனில் முன்னர் ஒன்பது நிலைகள் இருந்ததை இப்பாடல் கல்வெட்டுகளே விவரிக்கின்றன.

"ஓங்கு நலை யொன்ப துற்ற திருக் கோபுரமும்
பாங்கு பதினொன்று பயில் தூணுந் தேங்கு புகழ்
மன்னர் பெருமான் வழுதிகண்ட தென்காசி
தன்னிலன்றி யுண்டோ தலத்து"

கோபுரத் திருப்பணி முடிவுறும் முன்னரே பாரக்கிரம பாண்டியன் மரணமடைந்தான். இவன் மறைந்ததைக் குறிப்பிடும் மற்றோர் பாடல் கல்வெட்டு இவன் அறுபத்துமூவர் கூட்டத்திலோ வெள்ளி பொன் அம்பலங்களிலோ வேதத்திலோ சிவலோகத்திலோ விசுவநாதனின் பாதத்திலோ சென்றடைந்தான் எனக் குறிப்பிடுகிறது.

தனது அண்ணன் செய்வித்த பணி நிறைவுறாது குறையாய் கிடந்தன கண்டு வருந்திய அவனது சகோதரன் குலசேகரன் பணியினை முற்றுவித்தான். பராக்கிரம பாண்டியனுக்குப் பின் மூன்றாண்டு கழித்து கர்ப்பகிரகத்தையும் மகா கோபுரத்தையும் பணி முற்றுவித்து குடமுழுக்கும் நடத்தினான். இதுவும் பாடல் வடிவில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

"விண்ணாடர் போற்றுந் தென்காசிப்
பொற்கோபுர மீதிலெங்கண்ணாழ்வி
செய்த பணி யிப்படிக் குறையாய்க் கிட
க்க வொண்ணாதெனக் கண்டுயர்ந்த
தம்மோடெங்கு முன்றுரைத்தான்
மண்ணாளு மாலழகன் குலசேகர மன்னவனே"

பின்னர் இடி தாக்கியதாக கூறப்படும் இக்கோபுரம் இருபதாம் நூற்றாண்டின் பிற்பாதி வரையிலும் இடிந்த நிலையிலே காணப்பட்டது. அதன் பின்னான திருப்பணியினால் பழைய கோபுரம் அகற்றப்பட்டு ஏழு நிலையில் புதிய கோபுரம் நிறுவப்பட்டது.

கோவில் பின்னாளில் கேட்பாரற்றுப் போய்விடும்





எனக் கருதினானோ என்னவோ பல பாடல் கல்வெட்டுகள் தனக்குப் பின்னால் அக்கோவிலை புரப்பார்களை வேண்டியே காணப்படுகிறது.

"இந்த தென்காசி பேராலயம் தெய்வச் செயலாலே செய்யப்பட்டது. என்னுடைய செயலால் அல்ல. இதனை புரப்பார்களை குற்றேவல் செய்து பணிவேன் பராக்கிரம பாண்டியனே"

"பொழில் சூழ் தென்காசியைப் இவ்வுலகில் தாங்கிப் புரப்பார்களை செந்தாமரையால் கணவனாகிய கொற்கை வேந்தன் பராக்கிரமன் பணிபவனாய் எந்நாளும் விளங்குவார்கள்"

"மனத்தாலும நினைக்க முடியாத கோவிலை வகுத்த பராக்கிரம மாறனாகிய நான் இக்கோவிலை புரப்பார்களின் பாத்த்தினை தன் தலை மீது வைத்து வணங்குவேன்"

"பொன் மேவும் தென்காசிக் கோவிலுக்கு யாரும் நினையாதோர் குற்றம் வந்தால் அதனை ஒழித்துப் புரப்பார்களை பாரார் அணியப் பணிவேன் இந்த பராக்கிரம பாண்டியனாவேன்"

" தென்காசிக் கோவில் வகுத்து புவி கடல் போற்ற வைத்தேன். இதனை திரிசேர் விளக்கென காப்பார் பாதமென் தலை மேலியதே"

தனது வாக்கினை மெய்ப்பிக்க தனது உருவத்தினை உலகம்மன் கோவில் சன்னதி வாயிலிலே தரையில் பதித்துக் கொண்டான். அருகிலேயே பாண்டியரின்இரட்டைக் கயலும் பொறிக்கப்பட்டுள்ளது.

காசி விசுவநாதர் எனும் நாமம் கொண்டிருந்தாலும் உள்ளூர் மக்களால் கோபுர வாசலென்றே அழைக்கப்படுகிறது. அக்கோபுர வாசலின் கோபுரத்திற்கு காற்று வீசும் கோபுரம் என்றோர் பெயருமுண்டு. கோபுரத்தில் உள் நுழையும் போது பின்பக்கமிருந்து வீசும் காற்று வெளி வருகையில் முன் பக்கமாக வீசுவது இதன் சிறப்பு.

நெல்வேலி மாறனான வீரவேள் குலசேகர செழியன் அரசனாக முடிசூடியது, அந்நிகழ்வின் போது அவன் மேல் வீரவெண்பாமாலை பாடப்பட்டது, சீவலவேளன் மகுடஞ் சூடியது, வேல் வீர மாறனான அபிராமன் அரசனானது அவன் மேல் காசிக்கலியன் கவிராயன் எனும் புலவர் பாடல்களை பாடியது,

வல்லமெறிந்த வீரபாண்டிய அபிரமான் மகுடம் புனைந்தது ஆகிய நிகழ்வுகளைக் குறிப்பிடும் பாடல் கல்வெட்டுகளும் அக்கோபுர வாயிலிலே பொறிக்கப்பட்டுள்ளன.

வாய்ப்பு கிடைப்பவர்கள் பராக்கிரம பாண்டியனுயும் அவன் தென்காசி கோபுரத்தையும் கண்டு வரலாம்



# மேட்டூர் மீன் வறுவல்

## A.T மோகன்






உணவைத் தேடி விலங்கினங்கள் இடம்பெயர்வது போல, நாங்களும் செல்லும் இடங்களில் உள்ள சுவையான உணவுகளைத் தேடிக் கண்டுபிடித்து சுவைப்பது என்பது எங்கள் பயணங்களில் ஒரு பாதியாகவே மாறிவிட்டது. மேட்டூர் அணை பகுதிலும் பண்ணைவாடி, கோட்டையூர் பகுதிகளில் பரவலாக நடைபெறும் மீன் பிடிக்கும் தொழிலும் அதனை ஒட்டி நடைபெறும் சுவையான மீன் கறி சமையலைப் பற்றி காண்போம்.

மேட்டூர் அணையில் பிடிபடும் பலவகை மீன்களில் கட்லா, ரோகு, மிர்கால் கெழுத்தி, திலேபி, விலாங்கு, மூக்குமீன், வாளைமீன், மடவை, உளுவை, விஷகெழுத்தி, கல்பாசு, கறிமீன், வெளிச்சு, சோனாங்கெழுத்தி, சொட்டவாளை, பஞ்சலை, விரால், சென்னாகுஞ்சு உட்பட 20 க்கும் மேற்பட்ட மீன்கள் இங்கு பிடிபடுகின்றன. மேட்டூர் அணையில் பிடிபடும் மீன்கள், பிற ஆறுகள், ஏரிகள் மற்றும் குளங்களில் கிடைக்கும் மீன்களைவிட சுவை மிகுந்தவை. மேலும் பல்வேறு மருத்துவ குணங்களும் கொண்டது என நம்பப்படுவதால், மேட்டூர் மீன்களுக்கு நல்ல கிராக்கி உள்ளது, என்கின்றனர் உள்ளூர் மக்கள். இது குறித்து அவர்கள் மேலும் கூறியதாவது: "மேட்டூரில் சுற்றுலா பயணிகளுக்கு மீன் வறுவல், மீன் குழம்பு செய்து தரும் பணியில் அணைக்கட்டு முனியப்பன் கோவில் அருகில் 50க்கும் மேற்பட்ட குடும்பத்தினர் ஈடுபட்டுள்ளனர்.

மேட்டூரில் கிடைக்கும் அரைஞ்சான் மீனை உண்பதால் மூட்டுவலி, கைகால் வலி குணமாகும் என்பது காவிரி கரையோர கிராமமக்களின் நம்பிக்கை. திலேபி மீனை வழக்கத்தில் ஜிலேபி மீன் என்று கூறுவார்கள். வயாகரா மீன் என்றும் இதற்கு பெயர் உண்டு. இப்படி ஒவ்வொரு மீனுக்கும் ஒரு சிறப்பு உள்ளது. இதனால் மேட்டூர் அணை மீன்களுக்கான கிராக்கி, நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது."



# தென்னிந்தியாவின் திபெத்

## – வேலுதரன்

கர்நாடக மாநிலத்தின் கொல்லேகாலம் அருகேயுள்ள திபெத் அகதிகளின் ஒரு குடியமர்வு *(Dhondenling Tibetan Settlement)* என் பார்வையில் இக்கட்டுரையில் காண்போம்.

சென்ற ஜனவரி மாதத்தில் இரண்டு நாள் பயணமாக கர்நாடக மாநிலத்தில் மாண்டியா அருகே உள்ள சோழர்கள், கங்கர்கள் மற்றும் போசாளர்களால் கட்டப்பட்ட கோயில்களைக் காணச் சென்று இருந்தோம். கல்வெட்டுக்கள், கட்டிடக்கலை இவற்றைக் காண்பதே எங்கள் முக்கிய நோக்கமாக இருந்தது. இரண்டு கோயில்களைத் தவிர நாங்கள் திட்டமிட்ட மற்ற கோயில்களை எல்லாம் காண முடிந்தது ஒரு மகிழ்ச்சியான விடயமே. இதில் அகழ்வாய்வின் போது கண்டுபிடிக்கப்பட்ட சமணர் கோயில், சமண பள்ளிகளின் எச்சங்கள் மற்றும் சில இதுவரை காணாத நடு கற்களும் அடங்கும்.

பெங்களூரு சாலைப் போக்குவரத்தை கணக்கில் கொண்டு கிருஷ்ணகிரி வழியாகச் செல்லாமல் கொல்லேகால். ஹாசனூர் வழியாக ஈரோடு தடங்கல் இல்லாமல் (மலைப் பாதையில் கவிழும் நிலையில் இருந்த ஒரு லாரி..அந்த லாரியின் பக்கத்தில் சாலையின் குறுகிய இடத்தில் காரைச் செலுத்தி தப்பி வந்தது ஒரு தனி கதை) திரும்பி விடலாம் என முடிவெடுத்தோம்.

கொல்லேகால் அருகே தான் நாம் இப்பதிவில் காணப்போகும் திபெத் அகதிகளின் முகாம் அல்லது குடிஅமர்வு உள்ளது. கடந்த இரண்டு முறை இவ்வழியே சென்றும் இந்த திபெத் அகதிகள் முகாமையும் அங்கு அவர்களின் மடாலயங்களையும் காண சந்தர்பம் கூடிவராமலே போயிற்று. இந்தத்தடவை மாலை சுமார் 5 மணிக்கெல்லாம் திபெத் அகதிகள் குடியமர்த்தப்பட்ட இடத்திற்கு முன்பு இருக்கும் உடையார்பாளையத்தை அடைந்து விட்டதால் இம்முறை கண்டிப்பாக காணவேண்டும் என்ற ஆவலே மேலோங்கி இருந்தது.



திபெத் என்ற உடனே என்னுடைய கயிலாயம் மற்றும் மானசரோவர் யாத்திரையே மனத்தில் திரைப் படம் போல ஓடிற்று. எவ்வளவு அற்புதமான பயணம் அது. நேபாளம், அங்கு கண்ட பவுத்த மடாலயங்கள், புத்தர் சிலைகள், சுவர்களில் வரையப்பட்டு இருந்த கண்கவர் ஓவியங்கள், அவை உணர்த்தும் பாடங்கள், அங்கு பவுத்தமத தத்துவங்களை கற்கும் இளம் லாமாக்கள், "ஓம் மணி பத்மே ஹும்" என்ற மந்திர வாசகங்கள் அச்சடிக்கப்பட்ட பிரார்த்தனை கொடிகள் மற்றும் சக்கரங்கள், பின்பு விசா கிடைக்காமல் சீன நாட்டின் எல்லை ஓர நகரிலேயே மூன்று நாட்கள் தங்கி அந்த ஊரில் இருந்த பவுத்த மடாலயங்களைக் கண்டது, பவுத்தர்களில் ஒருவரது இறுதி சடங்கைக் காண நேர்ந்தது, பின்பு சீனர்களால் அமைக்கப்பட்ட போக்குவரத்து மிக மிக குறைந்த திபெத்தின் சாலைகள் வழியே பயணித்தது, வழியே கண்ட ஆள் அரவமற்ற ஒன்றிரண்டு கிராமங்களின் அமைதி, சாலை ஓரங்களில் கண்ட பவுத்த மடாலயங்களில் கட்டப்பட்டு இருந்த பிராத்தனைக் கொடிகள், இப்படி என மனத்திரையில் சுழன்று கொண்டே இருந்தது.

சார் .சார்... என்ன தூங்கிட்டீங்களா.. எழுந்திருங்க நம் காண வேண்டிய திபெத் அகதிகளின் முகாம் / குடியமர்வு இடம் வந்து விட்டது என்று என்னை நண்பர்கள் எழுப்ப, கயிலாய நினைவுகளில் இருந்து மீண்டு வர சிறிது நேரம் பிடித்தது. அகதிகள் முகாம் என்ற உடனே நமது நினைவுக்கு வருவது பர்மா மற்றும் இலங்கை அகதிகள் குடியமர்த்தப்பட்ட காலனிகளே. குறுகிய தெருக்கள், கூச்சல் குழப்பங்கள், அதில் கசகசவென நடமாடும் நம் தமிழ் இன மக்கள், ஒழுங்காக கட்டப்படாத வீடுகள், சூரியனும் சந்திரனும் வீட்டின் அந்தரங்கத்தை எட்டிப்பார்க்கும் கூரைகள் இப்படித்தானே... இல்லை .. இல்லை இவற்றில் இருந்து முற்றிலும் மாறுபட்டே இருந்தது.

அந்தக் குடியமர்வு சுமார் 3000 ஏக்கர் நிலப்பரப்பில் 22 கிராமங்களாக, கிராமத்திற்கு இருபத்தைந்து முதல் முப்பத்து குடும்பங்கள் என. சரி இவர்கள் எல்லாம் யார்.. இவர்கள் எப்படி இங்கு வந்தார்கள் என்ற வரலாற்றையும் கொஞ்சம் காண்போமா.. வாருங்கள் ஒரு 60 வருடங்கள் பின்னோக்கிப் பயணிப்போம்.

திபெத்தை சீனா அதிரடியாக 1959ல் ஆக்கிரமித்த பொழுது சுமார் 80000 ஆயிரம் திபெத்தியர்கள் தங்கள் மத குருவான தலாய் லாமாவுடன் திபெத்திலிருந்து வெளியேறி, இந்தியா, பூடான், நேபாளம் ஆகிய நாடுகளில் அகதிகளாகத் தஞ்சம் அடைந்தனர். அவர்கள் அனைவரும் மூன்று நாடுகளிலும் 58 இடங்களில் குடியமர்த்தப்பட்டனர் இந்தியா வந்த அவர்கள் 39 இடங்களில் குடியமர்த்தப்பட்டனர். அப்படி குடியமர்த்தப்பட்ட இடங்களுள் கொல்லேகாலம் அருகே டான்டென்லிங் செட்டில்மென்டும்
*(Dhondenling Settlement)* ஒன்று.

மொழிவாரியாக இந்தியா பிரிக்கப்படும் வரை கொல்லேகாலம் மதராஸ் மாகானத்தின் ஒரு



பகுதியாகவே இருந்தது. இந்த குடியமர்வு அகதிகளாக இந்தியா வந்து சுமார் 19 வருடங்கள் கழித்து ஏற்படுத்தப்பட்டது. அதுவும், தொழில்ரீதியாக (விவசாயம், கைவினைபொருட்கள் செய்தல் என) பிரிக்கப்பட்டு தென் இந்தியாவில் 5 இடங்களில் குடியமர்த்தப்பட்டனர். ஆரம்பத்தில் 3160 அகதிகளாக இருந்த மக்கட்தொகை 60 வருடத்திற்குப் பிறகு தற்போது 6000மாக அதிகரித்துள்ளதாகத் தெரிவிக்கின்றனர். கொடுக்கப்பட்ட 3000 ஏக்கர் நிலத்தில் 22 முகாம்கள் / கிராமங்களில் குடியமர்தப்பட்டனர். வீடுகள் நன்றாகவே கட்டப்பட்டு உள்ளது.

கடும் குளிருக்கு பழக்கப்பட்ட இவர்கள் வெப்பமான காட்டுப் பகுதிக்கு தங்களை மாற்றிக் கொண்டனர். ஆரம்பத்தில் வந்தவர்கள் வாழ்வின் பெரும் பகுதியை காட்டைத் திருத்தி விளை நிலங்களாக மற்றவே செலவழித்தனர். குடும்பத்தில் உழைக்கும் ஒவ்வொருவருக்கும் இரண்டு ஏக்கர் நிலம் வழங்கப்படுகின்றது. ஒருவருக்கு இறப்பு நேரிடும் பட்சத்தில் நிலம் இல்லாதவருக்கு மாற்றிக் கொடுக்கப்படுகின்றது. வருடத்திற்கு 140 முதல் 170 செமீ வரை மழைப் பொழிவு இருக்கின்றது. இப்போது ராகி, நெல், சோளம் பயிர் செய்கின்றனர்.

மற்ற இடங்களில் இயற்கைச் சீற்றத்தால் ஏற்படும் பருவநிலை மாற்றம், வறட்சி, பயிர் இழப்பு போன்றவை இவர்களுக்கும் விதிவிலக்கு இல்லை. இந்திய நாட்டின் குளிர் காலங்களில் ஸ்வெட்டர் பின்னத் தெரிந்தவர்கள் அயல் மாநிலங்களுக்குச் சென்று ஸ்வெட்டர் பின்னி வியாபாரம் செய்து விட்டு ஜனவரி பிப்ரவரி மாதங்களில் விவசாயத்திற்குத் திரும்பி விடுகின்றனர். இக்குடியிருப்பு பகுதியில் உயர்நிலைப்பள்ளி வரை மட்டுமே உள்ளது. கல்லூரி செல்ல வேண்டுமானால் பெங்களூருக்கோ அல்லது சென்னைக்கோதான் செல்ல வேண்டும் என்கின்றனர்.

கும்பத்திற்கு ஒருவரை கண்டிப்பாக அயல் நாடுகளில் படிபிற்க்கோ அல்லது வேலை நிமித்தமாகவோ அனுப்புகின்றனர், தங்கள் வாரிசுகளாவது நன்றாக இருக்க வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் தான். ஒரு மிகவும் கட்டுப்பாடு உள்ள முகாமைப் போலன்றி திபெத் மக்கள் இயல்பு வாழ்கை வாழ்வதாகவே தெரிந்தது. ஆனாலும் தங்கள் திபெத் நாட்டிற்கே, தங்கள் உடம்பில் ஊறிவிட்ட கடுங்குளிரை எதிர்கொள்ள திரும்பச் செல்வதையே இங்குள்ளவர்கள் விரும்புவதாக கூறுகின்றனர்.

*Mysore Resettlement and Development Agency (MYRADA).* என்ற அமைப்பு மூலமாகவே இக்குடியமர்வு செயல்படுத்தப்பட்டது. இக்குடியமர்வில் மருத்துவமனை, கூட்டுறவு பண்டகசாலை, பள்ளிக்கூடம், முதியோர் இல்லம், 5 பவுத்த மடாலயங்கள் முதலியன உள்ளன. முதியோர் இல்லம் அதரவற்றவர்களுக்கு ஒதுக்கப்படுகின்றது. தற்போது இல்லத்தில் 32 பேர்கள் இருக்கின்றனர். ஒருவர் இறக்கும் பட்சத்தில் அடுத்த முதியவருக்கு வாய்ப்பளிக்கப்படும் என்கின்றனர்.





இங்கு உள்ள 5 மடாலயங்களுள் பெரியது *Dzogchen monastery* டிசோக்சென் மடாலயமே. *1991*ஆம் ஆண்டு துவக்கப்பட்டு *1992*ஆம் வருடம் பூர்த்தியானது. மதகுரு தலாய் லாமாவின் திருக்கரங்களால் இம்மடாலயம் திறந்து வைக்கப்பட்டது. *2003* ஆம் ஆண்டு *10* வருட நிறைவும் கொண்டாடப்பட்டு கல்வெட்டும் நிறுவப்பட்டு உள்ளது. மடாலயத்தின் பின்புறம் *30* பிரார்த்தனை மந்திர எழுத்துக்களுடன் கூடிய உருளைகள் நிறுவப்பட்டு உள்ளது. திபெத்தியர்கள் வரிசையாக அவைகளைச் சுற்றிவிட்டு புத்தரை வணங்கச் செல்கின்றனர்.

அவை சுற்றும் பொழுது புத்தரின் போதனைகள் காற்றில் பரவி மக்கள் மனதை சென்றடையும் என்று நம்புகின்றனர். தரைத்தளத்தில் புத்தர் சிலைகள் வைக்கப்பட்டு வணங்கப்படுகின்றன. தினமும் இரண்டு வேலைகள் வழிபாடு நடத்தப்படுகின்றது. மதகுரு தலாய்லாமாவிற்கு என தனி இருக்கையும் அமைக்கப்பட்டு உள்ளது. மாலை வேளைகளில் திபெத்தியர்கள் ஸ்தூபியை வலம் வருகின்றர் இந்துக்கள் நவகிரகத்தைச் சுற்றுவது போல. சுவர்களில் பவுத்தமத போதனைகள், மற்றும் கோட்பாடுகள் சித்திரங்களாக கண்களையும் மனத்தையும் கவரும் வண்ணம் வரையப்பட்டுள்ளது. வண்ணமிகு சித்திரங்களை பார்த்துக்கொண்டு இருந்தாலே மனம் மிகவும் அமைதி அடைவதை உணர முடிகின்றது.

நாங்கள் சென்றபோது மக்கள் நடமாட்டம் அதிகமாக இல்லை. அவர்களின் மடாலயத்திற்குள் செல்லவோ அல்லது புகைப்படம் எடுக்கவோ எந்தவித கட்டுப்பாடுகள் விதிக்கப்படவில்லை என்பது ஒரு மகிழ்ச்சியான செய்தியே. பொழுது சாய்ந்து விளக்குகள் போட்ட பின்புதான் நாங்கள் இங்கு வந்து நீண்டநேரம் ஆகிவிட்டதை உணர்ந்தோம். பிரிய மனம் இன்றி ஈரோடை நோக்கி பயணத்தைத் துவங்கினோம்.. மீண்டும் வருவோம் என்ற நம்பிக்கையில்,







# சின்னதம்பி கடந்துவந்த பாதை



கருத்துப் படம்: இரா. ஜெகதீஷ்

**பிப் 15**

சின்னதம்பி யானை கும்கிகளை வைத்து மீண்டும் பிடிக்கப்பட்டு முதுமலை காப்பகத்துக்கு கொண்டுசெல்லப்பட்டு அடைக்கப்பட்டது.

**பிப் 11**

வழக்கு தள்ளிவைக்கப்பட்டது.

**பிப் 4**

சின்னதம்பியின் பாதுகாப்பைக் கருத்தில் கொண்டும் அதை கும்கியாக மாற்ற தடை கோரியும் பொதுநல வழக்கு ஒன்று தொடரப்பட்டு

**ஜனவரி 30 முதல் பிப் 2 வரை**

வரை யானை சின்னதம்பி ஊடகம் முழுக்க செய்தியானான். கிட்டதட்ட 150 கி.மீ. கடந்து தன் இருப்பிடம் நோக்கி வந்து கொண்டு இருந்தான் சின்னதம்பி.

**ஜனவரி 26**

ஆனைமலை பகுதியில் விடப்பட்டது. கழுத்தில் ரேடியோஆக்டிவ் காலர் பொருத்தப்பட்டு கண்காணிக்க ஏதுவாகவே விடப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

**ஜனவரி 25**

உடன் சுற்றி திரிந்த பெண் யானை மற்றும் குட்டி, 20 வனத்துறை மற்றும் கும்கி கலீம் உதவியுடன் காட்டிற்குள் விரட்டப்பட்டது.

**ஜனவரி 24**

மதியம் 1 மணி அளவில் முதுமலை தண்ணீர்ப்பந்தல் பகுதியில் முதல் மயக்க ஊசி செலுத்தப்பட்டது. தப்பித்தது சின்னதம்பி.

**பிப் 13**

யானையை பிடிக்க நீதி மன்றம் அனுமதி வழங்கியது.

**பிப் 4**

சின்னதம்பி யானையைக் கும்கியாக மாற்றும் எண்ணம் இல்லை எனத் தமிழக அரசு பதில் மனு.

**பிப் 3**

உடுமலைபேட்டை ஆர்.கிருஷ்ணாபுரத்தில், சர்க்கரை ஆலை ஒன்றில் தஞ்சம் அடைந்தான் சின்னதம்பி.

**ஜனவரி 29**

யானை சின்னதம்பி மீண்டும் நகருக்குள் புகுந்ததாக செய்திகள் பரவ தொடங்கியது. அன்று மாலையே அதை வனத்துறை உறுதிப்படுத்தியது.

**ஜனவரி 25**

மதியம் ஒரு மணி அளவில் நான்கு கும்கி யானைகள், 2 ஜேசிபி இயந்திரங்கள் உதவியுடன் உடல் முழுக்க இரத்த காயம் ஏற்பட்டு, யானை தந்தம் உடைந்தது பிடிபட்டது சின்னதம்பி யானை.

**ஜனவரி 25**

காலை 6 மணிக்கு வெற்றிகரமாக இரண்டாவது மயக்க ஊசி, தடாகம் பகுதியில் செலுத்தப்பட்டது.

**ஜனவரி 22**

சின்னதம்பி யானையைப் பிடிக்க திட்டமிடல் தொடங்கப்பட்டது



# சிதறிக் கிடக்கும் பாடல் பெற்ற ஸ்தலம்

## இராசு. சரவணன் ராஜா, வேலூர்



சென்னை வேலூர் நெடுஞ்சாலையில், 20 கி.மீ ராணிப்பேட்டைக்கு அருகில் நீவா நதிக் கரையில் பாடல் பெற்ற திருத்தலம் திருவல்லம் அமைந்துள்ளது. பல்லவர்கள், கங்கர்கள், பாணர்கள், சோழர்கள், விஜயநகர நாயக்கர்கள் எனப் பல அரசர்கள் நிவந்தனம் அளித்த மற்றும் பாடல் பெற்ற தலம் இது.

திருவலம் கோயிலின் தெற்கே சுமார் 2 கி மீ. தொலைவில் கம்மராஜபுரம் என்ற சிறிய கிராமத்தில், பனந்தோப்பு என்ற பகுதி உள்ளது. விளைநிலங்களுக்கு நடுவில் சிதிலமடைந்த சிவன் கோயில் பூமியில் புதைந்த நிலையில் காணப்படுகிறது. இந்த ஆலய கற்கள் கருப்பு நிறத்தில் காணப்படுவதால் இக்கிராம மக்கள் இதைக் கருப்பு கோயில் என்று அழைக்கின்றனர்.

வயல்வெளியில் தூரத்திலிருந்தே அடர்ந்த மரங்கள் செழித்து வளர்ந்து இருப்பது தெரிகின்றது. இதன் அருகே சென்று பார்த்தாலும் ஆலயம் தெரியாதவாறு மரங்கள் வளர்ந்து காணப்படுகிறது. மரங்களின் வேர்கள் கட்டடப் பகுதிகள் முழுவதும் ஊடுருவி உள்ளன.

கருவறை நிலமட்டத்திலிருந்து சுமார் 3 அடி













கீழே உள்ளது. பத்து அடி சதுரத்தில் காணப்படும் கருவறை உள்ளே தெய்வ சிலைகள் ஏதும் இல்லை. உருளையான எட்டுத் தூண்கள் மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. வடக்கு வாயில் உள்ளே நுழையும் போதே சுவரில் உள்ள உடைந்த கல்வெட்டு காணக்கிடைக்கிறது. துண்டு கல்வெட்டால் பொருள் ஏதும் புரியவில்லை.

உடைந்த நிலையில் தட்சிணாமூர்த்தி, நந்தி, முயலகன் எனச் சிற்பங்கள் சிதறிக் காணப்படுகின்றன. முயலகன் சிறு பாலகன் வடிவில் சிதையாமல் சுருண்ட கேசத்துடன் கையில் சிறு நாகத்துடன் அழகாகக் காட்சியளிக்கிறார். பார்க்கும் அனைவரையும் ஒருமுறை கைகளால் வருடவைக்கும் அழகு சிலை.

கிழக்கு மூலையில் மட்டும் ஆலய சுவர் சிதையாமல் உள்ளதால் அதில் உள்ள குறுஞ் சிற்பங்களைக் காணமுடிகின்றது. சிறு முனிவர்கள் வழிப்படும் காட்சி, நடனமாடும் நங்கை, மன்னர் ஒருவர் சிவலிங்கத்தை வழிபடும் காட்சி, இசைக்கருவிகள் வாசிக்கும் காட்சிகளும் மற்றும் தேவ கோட்டத்தின் மேலே மகரதோரணம். அதில் அழகிய வேலைப்பாடு உடையச் சிற்பங்கள் காட்சியளிக்கின்றன. ஒரு மூலையிலே இவ்வளவு என்றால், முழு கோயிலும் சுவர் அழிவதற்கு முன்பு எப்படிக் காட்சியளித்திருக்கும் என்பது உங்கள் கற்பனைக்கே.

கீழே விழுந்து கிடந்த மற்றொரு துண்டு கல்வெட்டில் ஸ்வஸ்திஸ்ரீ விக்ர (கி. பி.1118-1135) என்று ஆரம்பிக்கும் விக்ரமசோழன் ஏழாம் ஆட்சியாண்டு கல்வெட்டு காணக்கிடைக்கிறது பாதி மட்டுமே உள்ளதால் முழு பொருள் விளங்கவில்லை. அருகில் உள்ள புதரில் மேலும் பல உடைந்த சிற்பங்கள் மறைந்தும் சிதறியும் கிடைக்கின்றன.



# புதுவைத் தமிழ்ச்சங்க பொன்விழா தமிழ் மாநாடு 2019

## காவலர். த. விஜய் குமார்

புதுச்சேரி மாநிலத்தில் புதுவைத் தமிழ்ச்சங்க பொன்விழா தமிழ் மாநாடு திருவள்ளுவர் ஆண்டு உ0ரு0 (2050) கும்பம் (மாசி) நாள் (3,4,5) , ஆங்கில ஆண்டு 2019ஆம் ஆண்டுப் பிப்ரவரி 15,16,17 ஆகிய மூன்று நாட்களும் சிறப்பாகவும், மிகவும் விமர்சையாக மாநாடு நடைபெற்றது.

முதல் நிகழ்வாகப் பிப்ரவரி 15 வெள்ளிக் கிழமை மாலை 3 மணி அளவில் ஏ.எப்.டி திடலில் பள்ளி மாணவர்கள், பொது மக்களும் 1500க்கும் மேற்பட்டோர் சேர்ந்து திருவள்ளுவரின் உருவத்தை உருவாக்கி உலகச் சாதனை படைத்தனர் . அதன் பின்னர் 4 மணி அளவில் அந்தத் தேடலிலிருந்து திருவள்ளுவர் சிலை ஊர்வலத்துடன் ஆரம்பிக்கப்பட்டது. இதனுடன் இசைக்கலைஞர்கள், சிலம்பாட்டம், மயிலாட்டம், ஒயிலாட்டம், குதிரை ஆட்டம் போன்ற தமிழ் சம்பந்தமான அனைத்து கலைஞர்களும் மற்றும் பொதுமக்களும், தமிழ் ஆர்வலர்களும், தமிழ்ச் சங்கப் பொறுப்பாளர்கள் என 3000 மேற்பட்டவர்கள் தமிழ்ச் சங்க தலைவர் முனைவர் வி.முத்துத் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டுச் சம்பா கோயில் அருகே ஊர்வலம் முடிந்தது.

பிப்ரவரி 16ம் சனிக்கிழமை காலை 9 மணி அளவில் மங்கள இசையுடன் தமிழ்ச் சங்க பொறுப்பாளர் மற்றும் தலைவர் வி.முத்து முன்னிலையில் கொடியேற்றத்துடன் மாநாடு ஆரம்பித்தது. மாநாட்டின் தொடக்க உரையாக முதலமைச்சர் உயர்திரு வே.நாராயணசாமி அவர்கள் தலைமையில் தொடக்கப்பட்டது. தமிழ்ச் சங்க






செயலாளர் திரு மு பாலசுப்பிரமணியன் அவர்களால் வரவேற்புரை கொடுக்கப்பட்டது. மாநாட்டு மலர் உயர்திரு வே. நாராயணசாமி அவர்கள் கரங்களால் வெளியிடப்பட்டது. அடுத்த நிகழ்வாகப் புதிய நூல்கள் மாநாட்டு மேடையில் ஈரோடு எசு. ஆர் சுப்பிரமணியம் எழுதிய "வள்ளுவம் வழங்கும் வாழ்வியல் நெறிகள்" என்ற புத்தகமும், பாவலர் சீனு.மோகன்தாசு எழுதிய "நல்வாழ்வு கீரைகள்" என்ற புத்தகமும், முனைவர் சுந்தர முருகன் எழுதிய "தமிழ்க்கனல் க.இராமகிருட்டினர்" என்ற புத்தகமும், அ.நந்தினி எழுதிய திருக்குறள் புத்தகமும், திராவிடத் தலைவர் கி வீரமணி அவர்கள் எழுதிய "பெரியார் தமிழுக்கு என்ன செய்தார்" என்ற புத்தகம் வெளியிடப்பட்டது. மேலும் தமிழ் எழுத்தாளர்கள் எழுதிய புத்தகங்கள் பல வெளியிடப்பட்டது.

திருவள்ளுவர் அரங்கம், பாரதியார் அரங்கம், தொல்காப்பியர் அரங்கம், அகத்தியர் அரங்கம், மண்ணிசை அரங்கம், பட்டிமன்றம், கம்பர் அரங்கம், மனுநீதி சோழன் அரங்கம், சிந்தனை அரங்கம் மற்றும் ஆடல் அரங்கம் எனப் பத்து அமர்வுகளை உள்ளடக்கிச் சிறப்பாக நடந்தது. கடைசியாகச் சு.அரிசுரேஷ்பாபு அவர்களால் நன்றியுரை கூறி முதல் நாள் நிகழ்வு முடிவு பெற்றது.

பிப்ரவரி 17ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை மாநாடு காலை 9 மணி அளவில் மங்கல இசையுடன் ஆரம்பிக்கப்பட்டது. இதில் மகளிர் அரங்கம், கவியரங்கம், இன்னிசை அரங்கம், பாவேந்தர் அரங்கம், வீரமாமுனிவர் அரங்கம், நக்கீரர் அரங்கம், எனப் பல அரங்கங்கள் அமைத்து நிகழ்ச்சிகள் சிறப்பாக நடந்தது. இதில் பாராட்டு அரங்கில் கலைமாமணி, தமிழ்மாமணி, எழுத்தாளர், பாவலர், முனைவர், பேராசிரியர் மற்றும் தமிழ் உணர்வாளர்கள் போன்ற 50க்கும் மேற்பட்ட தமிழ் பெரியோர்களை மேடைக்கு அழைத்துத் தலைவர் விஜிபி சந்தோஷ் அவர்கள் முன்னிலையில் மற்றும் முனைவர் வி முத்துத் தலைமையில் பொன்னாடை போர்த்தியும், நினைவுப் பரிசு கொடுத்தும் கௌரவிக்கப்பட்டார்கள். மேலும் குறளரங்கம், பிரபஞ்சன் அரங்கம் என 10 அமர்வு கொண்டு மாநாட்டு சிறப்பாக நடந்தது,

கடைசி நிகழ்வாக மாநாட்டுத் தீர்மானங்கள் படிக்கப்பட்டது.

1) புதுச்சேரி அரசால் 1965ஆம் ஆண்டு இயற்றப்பட்ட புதுச்சேரி ஆட்சிமொழிச் சட்டத்தை உறுதியாகவும், உடனடியாக நிறைவேற்ற வேண்டும்.

2) வணிக நிறுவனங்கள், தொழில் நிறுவனங்கள், கடைகள் உள்ளிட்ட அனைத்து நிறுவனங்களின் பெயர் பலகைகளைத் தமிழ் எழுதப்பட வேண்டும் என்ற சட்டம் உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டும்.






*3) தமிழ் வழியில் பயிற்றுவிக்கும் தமிழ் வழிப் பள்ளிகளைத் தொடர்ந்து நடத்திட வேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டும் அவற்றை மூடக்கூடாது.*

*4) தமிழ்வளர்ச்சித்துறை அமைக்க வேண்டும் என்று புதுச்சேரி தமிழ் அறிஞர்கள் மற்றும் தமிழ் உணர்வாளர்களை நெடுங்காலமாக அரசிடம் கோரிக்கை வைத்து வருகின்றனர். தமிழ்வளர்ச்சித்துறை அமைத்துத் தமிழ் வளர்ச்சிக்கு உதவ வேண்டும்.*

*5) கடந்த ஆண்டுகளில் அறிவிக்கப்பட்டு வழங்கப்படாமல் உள்ள தமிழ்மாமணி கருத்துக்களை உடனடியாக வழங்க வேண்டும். மேலும், கலைமாமணி விருதுகள் அறிவிக்கப்படாமல் இருக்கின்றன. அவற்றை உடனடியாக அறிவித்து வழங்க வேண்டும்.*

*6) கலை, பண்பாட்டுத்துறை மூலம் புதுச்சேரி எழுத்தாளர்களின் நூல்கள் வாங்கப்பட்டு வந்தன. கடந்த சில ஆண்டுகளாக நூல்கள் வாங்கப்படவில்லை. நூல்களை உடனடியாக வாங்க ஏற்பாடு செய்ய வேண்டும்.*

*7) புதுச்சேரி இலாசுப்பேட்டையில் கல்வி நிறுவனங்கள் நிறைந்த சாலைக்குத் தொல்காப்பியர் சாலை என்று பெயரிடப்பட்டுள்ளது. தொல்காப்பியர் சாலை என்பதைப் புதுச்சேரி அரசு இதழில் வெளியிடுவதோடு அச்சாலையில் தொல்காப்பியர் சிலையையும் நிறுவ வேண்டும்.*

*8) புதுச்சேரிக்குப் பெருமை சேர்த்த அண்மையில் மறைந்த எழுத்தாளர் பிரபஞ்சன், தமிழறிஞர் இரா. திருமுருகன், இரண்டுமுறை சகதி அகடாமி விருது பெற்றுள்ள தமிழறிஞர் ம.இலெ..தங்கப்பா, 200க்கு மேல் நூல்களை எழுதிய புதுச்சேரி மற்றும் தமிழக அரசின் விருதுகளைப் பெற்றுள்ள புலவரேறு அரிமதி தென்னகனார் ஆகியோரின் தமிழ்*






பணியைப் பெருமைப்படுத்தும் வண்ணம் இவர்களின் பெயர்களைச் சாலைகளுக்கும், பள்ளிகளுக்கும் சூட்ட வேண்டும். மேலும், இவர்களின் சிலைகளை அமைத்திட வேண்டும்.

9) திருக்குறளை இந்திய திருநாட்டின் தேசிய நூலாக அறிவிக்க வேண்டும் எனச் சட்டப்பேரவையில் தீர்மானம் நிறைவேற்றி நடுவன் அரசுக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

10) புதுச்சேரி அரசு கவிதை, சிறுகதை, நாடகம், புதினம், கட்டுரை போன்ற பிரிவுகளில் சிறந்த நூல்களுக்கு ஆண்டுதோறும் "கம்பன் புகழ் இலக்கியப் பரிசினை" அளித்து வருகிறது. இதில் கவிதை நூல்களுக்கு மட்டும் "கம்பன் புகழ் இலக்கியப் பரிசு" என்றும், சிறுகதை, புதினம், நாடகம் கட்டுரை போன்ற புனைகதை பிரிவுகளுக்கு "பிரபஞ்சன் புகழ் இலக்கியப் பரிசு" என்று பிரித்து வழங்க வேண்டும்.

புதுச்சேரி மாநில பொன் விழா மாநாட்டில் கலந்துகொண்டு அரசியல் முக்கியத் தலைவர்கள் எம்பி திருக் கோகுல கிருஷ்ணன், எம்பி திரு ராதாகிருஷ்ணன், சபாநாயகர் திரு வைத்திலிங்கம், திரு லட்சுமிநாராயணன் எம்எல்ஏ, திரு. அனந்தராமன் எம்எல்ஏ, திரு. சிவக்கொழுந்து எம்எல்ஏ, திரு. சிவா எம்எல்ஏ, கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் திரு முத்தரசன், திருப் பாலகிருஷ்ணன் , திராவிடத் தலைவர் கி வீரமணி மற்றும் விடுதலை சிறுத்தை கட்சித் தலைவர் தொல் திருமாவளவன் கலந்து கொண்டனர். முன்னாள் நீதிபதிகள், தமிழ் சங்க தலைவர்கள், தொழிலதிபர்கள் போன்ற பலர் வருகை புரிந்து மாநாட்டைச் சிறப்பித்தனர்

கந்தன் திருமண மண்டபத்தில் மூன்று நாட்களுக்குக் காலை, மதியம், இரவு என மூன்று வேளைகளிலும் சுவையான உணவு மாநாட்டில் பங்கு பெற்ற அனைவருக்கும் பரிமாறப்பட்டது. மாநாட்டில் வெளிநாட்டில் இருந்து பல தமிழறிஞர்கள் பங்குபெற்றனர். வெளிமாநில, வெளிமாவட்ட தமிழ் அறிஞர்கள், உணவாளர்கள் என நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

மாநாட்டு அரங்கு வெளியே ந.கோபிராமன் அவர்கள் ஏற்பாடு செய்த பழங்கால நாணயங்கள், தபால் தலைகள், அரிய பொருட்கள் போன்ற சிறப்பு வாய்ந்த கண்காட்சி அரங்கம் பொன்விழா மாநாட்டிற்கு மேலும் சிறப்பை சேர்த்தது. மேலும் பல புத்தகக் கடைகள் விற்பனைக்கு அரங்கம் போடப்பட்டது.

பொன்விழா தமிழ் மாநாட்டு மலர் 204 பக்கங்களைக் கொண்டு தலைசிறந்த தமிழ் அறிஞர்கள் எழுதிய 81 கட்டுரைகள் உடன் 15 கவிதைகளும் சேர்ந்து மாநாட்டு மலரை மென்மேலும் அழகுபடுத்தியது. புதுச்சேரியின் பழங்காலத்தை நினைவுபடுத்தும் விதமாக 26 புகைப்படங்கள் இடம் பெற்றுள்ளது.

புதுவைத் தமிழ்ச்சங்க மேனாள் தலைவர்கள் மு.த. வேலாயுதனார் , சிவ.கண்ணப்பா, திருமுடி சேதுராமன், மன்னர் மன்னன், சேது முருகபூபதி, சீனு. ராமச்சந்திரன் ஆகியோர் புகைப்படங்களும் இடம் பெற்றுள்ளது. புதுவையில் தமிழ் வளர்த்த சான்றோர் என இரண்டு பக்கத்திற்கு 40 தமிழ் அறிஞர்களின் புகைப்படங்கள் வரிசைப் படுத்தப்பட்டது.







மனிதன் உயிர் வாழ முக்கியமானது உணவாகும். ஆதி மனிதனின் முதல் தொழிலே உணவு தேடலாயிருந்தது ஆதிகால மனிதன் இயற்கையிலேயே கிடைத்த காய், கனி, கிழங்குகளை உண்டான். பின்னர் விலங்குகளை வேட்டையாடி அவற்றின் சதைப் பற்றுள்ள பகுதிகளைப் பச்சையாக உண்டான். தீயை உண்டாக்கக் கற்றுக் கொண்ட பின்னரே விலங்கு இறைச்சியைத் தீ யில் வேகவைத்து பக்குவப்படுத்தி உண்ணத் தொடங்கினான். ஆற்றங்கரைப் பகுதியில் நிலையாகத் தங்கி வாழத் தொடங்கிய போது தான் மனிதன் தன் உணவினைத் தானே உற்பத்தி பிரியத் தொடங்கினான். நாகரீகப் படிநிலையின் காரணமாக ஏற்பட்ட சமுதாய வளர்ச்சியினால் தான் உணவு உற்பத்தியும் உணவுப் பழக்கங்களும் வளரத்தொடங்கின.

"மனித இனம், உணவு, உடை, உறைவிடம் ஆகிய அடிப்படைத் தேவைகள் மூன்றினை எவ்வாறு இயற்கையிலிருந்து பெற்று நுகர்கிறது என்பதைப் பொறுத்து அதன் நாகரீகப் படிநிலையைக் கணிக்கலாம். உணவு, உடை, உறைவிடம் மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை: ஒன்றை ஒன்று தீர்மானிப்பவை ஒன்றில் ஏற்படுகிற மாற்றங்கள் மற்றவற்றையும் பாதிக்கக்கூடியவை. ஒரு குடும்பத்தின், சமூகத்தின், நாட்டின், பிரதேசத்தின் ஒட்டு மொத்தமான நாகரீக வாழ்வின், அந்த வாழ்வின் முழுமையின் சமச்சீரான தகுதிகளைக் கொண்ட அங்கங்களாக அம்மூன்றையும் மதிப்பிடலாம்" என்கிறார் ராஜ்கௌதமன்.

"மனித சமுதாயம் உணவுக்காக எவ்வளவு போராட்டங்களைக் காலங்காலமாக நடத்திக் கொண்டு வந்திருக்கிறது என்பதை நாம் சரித்திரத்தில் பல இடங்களில் பார்க்கலாம். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மத்திய ஆசியாவிலிருந்து ஆரியர்கள் கூட்டங் கூட்டமாக இந்தியாவிற்கு உணவைத் தேடிவந்தனர். இந்தியாவின் உணவு வளத்தை முன்னிட்டு ஆரியர்களும் திராவிடர்களும் நீண்டகாலம் போரிட்டதையும் சரித்திரத்தின் வாயிலாக அறியலாம்" என்கிறார் சே.நமச்சிவாயம். பண்டைத்தமிழரின் உணவு முறைகளை அறிந்து



கொள்ள எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் பெரிதும் துணை நிற்கின்றன. கீரைகள், கிழங்குகள், பழங்கள், நெல், ஊன், கள், மீன்கள், தானியங்கள், பால், தயிர், மோர், இளநீர், நுங்கு, அப்பம் எனப் பலவிதமான உணவுப் பொருட்களைப் பழந்தமிழர் உண்டு வாழ்ந்தனர்.

உணவு என்ற சொல்லினை உற்று நோக்கினால் உண் - உணா > என அமைகிறது. உணவு என்பதில் உண் என்பது அடிச்சொல்லாக அமைகிறது. அடிச்சொல்லினடிப்படையில் உண்ணப்படுவது அனைத்தும் உணவு என எண்ணத் தோன்றுகிறது. உடல் நலம் குன்றியவனுக்கு மருந்தாகப் பயன்படும் கஞ்சி பசி உணர்வு கொண்டவனுக்கு உணவாகப் பயன்படுவதால் உண்ணப்படுவனவெல்லாம் உணவாகாது. ஆகவே வாய் வழியாக உட்கொள்ளப்பட்டு உயிர் வாழ்வதற்குத் தேவையான ஆற்றலைத் தரும் பொருளை உணவெனலாம். குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனை வாழ்த்திப்பாடும் புறப் பாடலொன்றில்

"நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்"
"உண்டி கொடுத்தோர் உயிர்க்கொடுத் தோரே"(புறம்.18:18-19) என உணவின் முக்கியத்துவத்தை எடுத்துரைக்கிறார்.

பண்ணன் என்ற வள்ளல் பலரது பசியைப் போக்கிய காரணத்தால் தான் பிசிப்பிணி மருத்துவன் "பசிப்பிணி மருத்துவன் இல்லம்" (புறம்.173:13) என உயர்வாகக் குறிப்பிடப்படுகிறான்.

உறைவிடம், உடை, இல்லாமல் கூட வாழ முடியும். ஆனால் உணவின்றி வாழ்ந்தவர் இல்லை. ஆற்றுக்குள் இருந்து அரகரா என்றாலும் சோற்றுக்குள் இருக்கிறான் சொக்கநாதன் என்பது பழமொழியாகும். கடவுளை மையமாகக் கொண்டு சண்டையிட்டுக் கொள்ளும் மனித சமுதாயம் உணவு மட்டும் அனைவருக்கும் பொதுவான கடவுள் என்பதை ஏற்றுக் கொள்ளுகிறது என்பதை மறுப்பதற்கில்லை. மனிதன் தன் அத்தனை நல்ல குணங்களையும் இழந்து மதி கெட்டுத் திரியும் நிலைமை உணவில்லாத சூழலில் தான் ஏற்படுகிறது. இந்நிலையைத்தான் தமிழ்ச் சான்றோர்கள் பசி வந்திடப் பத்தும் பறந்து போகும் என்று குறிப்பிட்டனர்.

நெய்தல் நிலப்பகுதியில் வாழ்ந்த பரதவ மக்கள் மீன்பிடித்தலை முதன்மையான தொழிலாகக் கொண்டிருந்ததால் இவர்களது உணவில் பல வகையான மீன்கள் இடம் பெற்றன. பரதவர் புரிந்த தொழிலுக்கேற்பவே அவர்களது உணவுப் பழக்கங்களும் அமைந்திருந்தது எனலாம். கடலில் மீன் பிடித்துவிட்டு வீடு திரும்பிய தந்தைக்கு நெல்லினால் சமைத்த முரலாகிய வெண் சோற்றை அயிரை மீனையிட்டு ஆக்கிய கருவாட்டுடன் அவனுடைய இளைய மகள் அளித்ததை அகப்பாடலொன்றில் குடவாயிற் கீரத்தனார்.

"நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு
உப்புநொடை நெல்லின் முதல் வெண்சோறு அயிலை
துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்"
(அகம்.60:3-6) எனக் குறிப்பிட்டுள்ளார்.

நற்றிணைப் பாடலொன்றில் உலோச்சனார் மூதூர் பகுதி நெய்தல் நில மக்கள் கொழுமையான மீன்களைச் சுட்டு உண்டதை

"அழியா மரபின் நம் மூதூர் நன்றே
கொழுமீன் சுடு புகை மறுகினுள் மயங்கி" (நற்.311:5-6) எனக் குறிப்பிட்டுள்ளார்.

காவிரிப்பூம்பட்டினத்து மீனவர்கள் கடலில் பிடித்த இறாலைச் சுட்டும் வயலாமையை வேகவைத்துப் பக்குவம் செய்து உண்டதைப் பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார்
"கடலிறவின் சூடு தின்றும்
வயல் ஆமைப் புழுக்குண்டும்" (பட்.63-64) எனக் குறிப்பிட்டுள்ளார்.

பட்டினப்பாலையின் மற்றோர் இடத்தில் புகார் நகரில் மீன் பொறித்து விற்கும் கடைகள் இருந்தன எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

"மீன்தடிந்து விடக்கு அறுத்து ஊன் பொரிக்கும் ஒலிமுன்றில்" (பட். 176-177)

## கள்:

பரதவர்கள் ஆழ்கடலுக்குச் சென்று மீன் பிடிக்கும் கடின உழைப்பாளிகளாவர். ஆகவே அவர்கள் உடல் களைப்பு நீங்க கள்ளினைப் பருகினர். கள் பரதவர்களுக்குப் பேரின்பமும் புத்துணர்ச்சியும் தரும் பானமாக அக்காலத்தில் விளங்கியது. பனைமரத் தோப்புகளுக்கிடையே பரதவரது குடியிருப்பு அமைந்திருந்ததால் அவர்கள் அப்பனைமரங்களிலிருந்து கள்ளினை வடித்துப் பருகினர். நற்றிணைப் பாடலொன்றில் உலோச்சனார் பரதவர்கள் கரிய பனையினது இனிய கள்ளையுண்டு களித்ததை

"பாட்டம் பொய்யாது பரதவர் பகர
இரும்பனந் தீம்பிழி உண்போர் மகிழும்" (நற்.38:2-3) எனக் குறிப்பிட்டுள்ளார்.

உயர்ந்த புன்னை மரங்களின் நிழலில் தங்கி தேன் மணம் கமழ்கின்ற கள்ளினைப் பரதவர்கள் தம் சுற்றத்தாரோடு பருகியதை நற்றிணைப் பாடலொன்றில் பெருங்கண்ணனார்.



தமிழர் மீனவர் சமூகம்

"ஓங்கிரும் புன்னை வரிநிழல் இருந்து தேங்கமழ் தேறல் கிளையோடு மாந்திப் பெரிய மகிழும் துறைவன் ............. ,," (நற்.388:7-9) எனக் குறிப்பிட்டுள்ளார்.

வலிமை மிக்கத் தோளுடைய பரதவர்கள் வெப்ப முட்டும் மதுவை விரும்பி உண்டு குரவைக்கூத்தின் தாளத்திற்கேற்ப ஆடியதை புறப்பாடலொன்றில் மருதனார்,

"திண்டிமில் வன்பரதவர் வெப்புடைய மட்டுண்டு தண் குரவைச் சீர் தூக்குந்து" (புறம். 24:4-6) எனக் குறிப்பிட்டுள்ளார்.

காவிரிப்பூம்பட்டினத்துப் பரதவர்கள் பனங்கள் அருந்தியதைப் பட்டினப்பாலை "பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும் (பட்.89) எனக் குறிப்பிடுகிறது. பட்டினப்பாலையின் மற்றோர் இடத்தில் காவிரிப்பூம்பட்டினத்துச் செல்வ மகளிர் மட்டு என்னும் இன்சுவைப் பானத்தை நீக்கி வேட்கையைத் தூண்டும் மது உண்டதை மட்டு நீக்கி மதுமகிழ்ந்தும்(பட்.108) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பரதவர்களின் உணவுப் பழக்கத்தை உற்று நோக்கும் போது மீனும், கள்ளும் இவர்களது உணவில் முக்கிய இடத்தைப் பெற்றன எனலாம். இறால், வயலாமை, அயிலைமீன், கொழுமீன், போன்றவற்றைப் பக்குவப்படுத்தித் தீ யில் சுட்டு உண்டதைப் பார்க்கும் போது வேக வைத்து உண்ணும் நாகரீக நிலையைப் பெற்றிருந்தனர் எனலாம். இறுதியாகக் கூறுமிடத்துப் பரதவர்கள் இறைச்சி உணவினை மிகுதியாக உண்டு வாழ்ந்தவர் என்பது தெளிவாகப் புலனாகிறது.

## விருந்தோம்பல்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நானிலங்களில் வாழ்ந்த மக்கள் தங்களுடைய வாழ்க்கை முறைக்கேற்பவும், செல்வ நிலைக்கேற்பவும் தங்களுக்குக் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு தம்மிடம் வந்த விருந்தினர் அனைவருக்கும் விருந்தளித்துள்ளனர். பழந்தமிழரது வாழ்வில் இடம் பெற்ற விருந்தோம்பல் என்னும் பண்பு இல்லறத்தின் நல்லறமாகவும், வாழ்வியற் கோட்பாடாகவும் அமைந்தது எனலாம். ஆற்றுப்படை நூல்கள், வேந்தர்களும், வள்ளல்களும், குடிமக்களும் விருந்தோம்பியதற்குச் சான்றாக விளங்குகின்றன. "தின்பதற்கும் குடிப்பதற்குமான பல நல்ல பொருட்களுடன் கூடிய சிறந்த உணவு விருந்து; மனமகிழ்வூட்டுவனவும் விருந்தாகும்" என ஆங்கில அகராதி குறிப்பிடுகிறது.

"விருந்தினர்க்கு உணவு படைத்தல் விருந்தின் அடிக்கருத்தாகக் கருதப்பட்டுள்ளது" என்கிறார் பு. அரங்க இராதாகிருட்டிணன்.

சங்ககாலத்தில் கணவனும் மனைவியும் இணைந்து விருந்தினர்களுக்கு விருந்து படைத்து

மகிழ்ந்துள்ளனர். தலைவன் விருந்தோம்பத் தேவையான பொருளீட்டி வருவதும், தலைவி விருந்தினர்களுக்கு விருந்து படைப்பதும் இல்லற நெறியாக இருந்தது. தலைவன் போரில் வென்று பரிசில் பெற்று விருந்தோம்பத் தேவையான பொருளீட்டி வருவான். அவனது மனைவி பாணர்களையும் அவர்களோடு வந்தவர்களையும் வரவேற்று விருந்தோம்புவாள். இதனைப் புறப்பாடலொன்றில் தங்கால் பொற்கொல்லனார்

"யாணர் நல்லவை பாணரொடு ஓராங்கு வருவிருந்து அயரும் விரும்பினள் கிழவனும் அருஞ்சமம் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்து அண்ணல் யானை அணிந்த
பொன்செய் ஓடைப் பெரும்பரி சிலனே" (புறம்.326:11-15) எனக் குறிப்பிட்டுள்ளார்.

இல்லற வாழ்வில் செல்வம் சேர்த்து வாழ்வதின் நோக்கம் விருந்தினரை உபசரித்து உதவி செய்வதற்குத் தான் இதனைத் திருவள்ளுவர்

"இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு" (குறள்.81) எனக் குறிப்பிட்டுள்ளார்.

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ மக்களும் தங்கள் இல்லம் நாடி வரும் விருந்தினரை அன்புடன் வரவேற்று விருந்தோம்பி மகிழும் சிறந்த பண்பாட்டினைக் கொண்டிருந்தனர்.

பகற்பொழுதில் பெரிய மனைக்கு வந்த விருந்தினர்களை வரவேற்ற நெய்தல் நில மகளிர் அவர்கள் உண்ணுவதற்குக் கொக்கின் நகம் போன்ற வெண்சோற்றை அளித்தனர். பின்னர் வீட்டு முற்றத்தில் அச்சோற்றினை நிவேதித்துப் பலியாகப் போடுவர். அதனைக் காக்கைகள் உண்ணும். இச்செய்தியினை நற்றிணைப் பாடலொன்றில் நக்கீரர்,

"கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுக் திருவுடை வியநகர் வருவதிருந்து அயர்மார் பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த கொக்குகிர் நிமிரல் மாந்தி எற்பட
அகலங் காடி அசைநிழல் குவித்த" (நற்.258:3-7) எனக் குறிப்பிட்டுள்ளார்.

அளவுபடாத உணவுப் பொருட்களை இல்லிடத்தே வரும் விருந்தினர்க்குப் பகுத்தளித்து வாழும் தண்ணிய குடிவாழ்க்கையையுடைய நெய்தல் நில சீறூரை நற்றிணைப்பாடலொன்றில் கதப்பிள்ளையார்,

"வரையாத் தாரம் வருவிருந்து அயரும் தண்குடி தாழ்நர் அம்குடிச் சீறூர்" (நற்.135:3-4) எனக் குறிப்பிட்டுள்ளார்.

எயிற்பட்டினத்துப் பரதவமகள் களிப்பு மிக்கப் பழையக் கள்ளையும், சுட்ட குழல் மீனின் இறைச்சியையும் பாணர்க்கும் விறலியர்க்கும் கொடுத்து விருந்தோம்பியதை சிறுபாணாற்றுப்படையில் நல்லூர் நத்தத்தனார்.

"மதி ஏக்கறூஉம் மாசு அறு திருமுகத்து நுதி வேல் நோக்கின் நுளை மகள் அரித்த பழம் படு தேறல் பரதவர் மடுப்பக் ... ... ... ... ... ...
வறல் குழல் சூட்டின் வயின் வயின் பெறுகுவீர்" (சிறு. 157-163) எனக் குறிப்பிட்டுள்ளார்.

தொண்டை நாட்டுக் கொடுமுடி வலைஞர்கள் குற்றாத கொழியல் அரிசியைக் கொண்டு கூழாகச் சமைத்த சுவையுள்ள உணவை, அகன்ற வாயுடைய முடைந்த தட்டிலே ஊற்றி ஆறவிட்டு, பாம்புப் புற்றிலே இருக்கும் புற்றாஞ் சோற்றைப் போலிருக்கின்ற மெல்லிய நல்ல நெல் முளையைச் சுவை உண்டாக்கக் கலந்து காலை, மாலை ஆகிய இருவேளையும் அரிக்காமல் வலிய வாய் உடைய சாடியில் நாற்றம் போக ஊற்றி வைத்து அது முற்றிய பின் விரல் வைத்து அரிப்பர். அங்ஙனம் அரிக்கப்படும் கள் செவ்விய நீர்மை உடையதாக இருக்கும் இப்படிப்பட்ட நறும்பிழிக் கள்ளைச் சுட்ட மீனோடு பாணர்க்குக் கொடுத்ததைப் பெரும்பாணாற்றுப்படையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

"அவையா அரிசி அம் களித் துழவை மலர் வாய்ப் பிழாவில் புலர ஆற்றி பாம்பு உறை புற்றின் குரும்பி ஏய்க்கும் பூம் புற நல் அடை அளைஇ தேம்பட எல்லையும் இரவும் இருமுறை கழிப்பி வால் வாய்ச் சாடியின் வழைச்சு அறவிளைந்த வெந்நீர் அரியல் விரல் அலை நறும்பிழி

"தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவீர்" (பெரும்.275-282) எனக் குறிப்பிட்டுள்ளார்.

தொண்டை நாட்டுப் பட்டினத்தில் (மாமல்லபுரம்) வாழ்ந்த நெய்தல் நிலத்தார் நெல்லை இடித்து மாவாகிய உணவை ஆண் பன்றிக்குக் கொடுத்துக் கொழுக்க வைத்தனர். பின்னொரு நாள் ஆண் பன்றியைக் கொன்று அதன் கொழுத்த தசையை உணவாக்கி வெறியூட்டும் கள்ளுடன் பாணர்க்குத் தந்ததைப் பெரும் பாணாற்றுப்படையில்

"ஈர்ஞ் சேறு ஆடிய இரும்பல் குட்டிப் பல் மயிர்ப் பிணவொடு பாயம் போகாது நெல் மா வல்சி தீற்றிப் பல் நாள் குழி நிறுத்து ஓம்பிய குறுந்தாள் ஏற்றைக் கொழு நிணத் தடியொடு கூர் நறாப் பெறுகுவிர்" (பெரும்.341-345) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.



# வேலூரில் நாணயக் கண்காட்சி


## திருமதி. மகேஸ்வரி பாபு, பெங்களூர்


நாணயங்கள் பல நூற்றாண்டுகளாகப் புழக்கத்தில் இருந்துவருகின்றது. இந்த நாணயங்கள் அரசர்களின் காலங்கள் சங்ககால நாகரீகங்களை வெளிப்படுத்தும் காட்சியங்களாக அமைந்துள்ளன. நாணயங்கள் பல நூற்றாண்டு எனில் அஞ்சல் தலைகள் சில நூற்றாண்டுகளாக பல நாடுகளின் வரலாற்றை வெளிச்சம் போட்டுக் காட்டும் சரித்திர சான்றுகளாகத் திகழ்கின்றன.

தன்னார்வலர்கள் சரித்திர ஆர்வலர்கள் பொழுதுபோக்குக்கு என சிலர் நாணயங்கள் மற்றும் அஞ்சல் தலைகளைச் சேகரிக்கத் தொடங்கினர். இவர்கள் பல நாடுகளில் பல இடங்களில் தனக்கென சங்கங்கள் அமைத்து பெரும் அளவில் அதில் ஈடுபட துவங்கினர்.

வேலூர் மாவட்டத்தில் இருக்கும் ஆர்வலர்கள் ஒன்று சேர்த்து சங்கம் ஒன்றை துவக்க முடிவு செய்து 2009-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் வேலூர் கோட்டையில் கூடி வேலூர் கோட்டை நாணயவியல் மற்றும் அஞ்சல் தலை சேகரிப்பாளர் சங்கம் அமைத்தனர். அன்று 20 பேருடன் தொடங்கிய சங்கம் இன்று 100 உறுப்பினர்களை கொண்டதாக வளர்ந்துள்ளது.

மேலும் பொதுமக்களை முகநூல் வாயிலாக அழைத்து வேலூரைச் சுற்றியுள்ளச் தொன்மையான சரித்திர தடயங்களை மரபுநடை மூலமாகக் காண்பிக்கப்பட்டது. இந்த ஆண்டும் பிப்-15, 16, 17, வேலூர் டவுன்ஹாலில் நாணயவியல் கண்காட்சி










நடைபெற்றது. சங்கத் தலைவர் திரு.அஷ்ரப் அலி எழுதிய வியக்கத்தக்க வேலூர் முன்னாள் எம்.பி.முகமதுஅலி வெளியிட ஸ்பிரிங்ஸ்டே பள்ளி தாளாளர் ராஜேந்திரன் பெற்றுக் கொண்டார். திரு. அஷ்ரப் அலி தனது 40 ஆண்டுக்கால களப்பணியில் வேலூரைச் சுற்றியுள்ள தொன்மை தடயங்களை இப்புத்தகத்தில் எழுதியுள்ளார்.

இக்கண்காட்சியில் சங்ககால நாணயங்கள் தொடங்கி பல்வேறு நாடுகளின் அஞ்சல்தலைகள், தேசத்தலைவர்களின் புகைப்படங்கள் காட்சிப்படுத்தப்பட்டன.

வேலூர் சரவணன் ராஜா அவர்களின் சேகரிப்பிலிருந்து கின்னஸ் சாதனை படைத்த மலேசியாவின் 2017ஆம் ஆண்டு வெளியிட்ட உலகின் மிகப்பெரிய பணத்தாலும் ருமேனியா நாட்டின் 1917ஆம் ஆண்டு வெளியிட்ட உலகின் மிகச் சிறிய பணத்தாலும் இடம்பெற்றன. வந்திருந்த பார்வையாளர்களை இவை ஆச்சரியப்படுத்தின. சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டு வந்த மாணவர்களின் எண்ணிக்கை கூடுதலாக இருந்தது ஒரு நல்ல மாற்றமே.



# மணிமங்கலத்தின் தொண்டை மண்டல நவகண்டச் சிற்பங்கள்

– வேலுதரன்

சமீப காலங்களில் ஒரு தலைவன் இறந்த பின்பு அவனுடைய அனுதாபிகள் தாங்களும் தங்களுடைய உயிரை மாய்த்துக்கொல்வதை ஊடகங்களின் வழியாக கேள்விப்பட்டு இருக்கின்றோம்.. இப்படியும் இருக்க முடியுமா என்று எண்ணத் தோன்றும். அனால் இதுவே சிலப்பதிகாரம், கலிங்கத்துப் பரணி, தக்கயாக பரணி போன்ற இலக்கியங்களில் நவகண்டமாகவும் / அரிகண்டமாகவும் சித்தரிக்கப்படுகின்றது.

பல காரணங்களுக்காக ஒருவர் தன் தலையை அரிந்து அல்லது வெட்டிக் கொண்டு, "தலை பலியிடல்" என்ற நிகழ்வாக இறைவனுக்கோ அல்லது இறைவி / கொற்றவைக்கோ அர்பணிப்பதைக் கூறுகின்றன. கொற்றவை பாலை நில தெய்வமாகவே கருதப்பட்டாலும் அவள் குறிஞ்சி நில தெய்வமாகவே வணங்கப்பட்டதாக இலக்கியங்கள் கூறுகின்றன. மறவர்களுக்கு தொழிலில் வெற்றியைக் கொடுப்பவளாகவே கருதப்பட்டது. கொற்றவை பற்றி சிலப்பதிகாரங்களுக்கு முந்தைய நூல்களில் காணப்படவில்லை. 5ல் இருந்து 6ஆம் நூற்றாண்டுகளில் கலப்பிரர் ஆட்சிக்குப்பிறகு எழுதப்பட்டது. அதில் கொற்றவையைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன.

அரிகண்டம் என்பது தன் தலையை தானே ஒருகையால் பிடித்துக்கொண்டோ அல்லது தலையை மரம் அல்லது மூங்கிலால் வில் போன்ற வளைவான அமைப்பு ஒன்றுடன் கட்டிக்கொண்டோ, தன் தலையை வெட்டிக் கொள்வதாகும் நவகண்டம் என்பது உடலின் ஒன்பது ரத்த நாளங்களை வெட்டி உதிரப்போக்கு ஏற்பட வைத்து பின்பு தன் தலையைத் தானே வெட்டிக் கொள்வது.

தலைப்பலி என்ற நவகண்டம் போரின் போது தன் நாடு வெற்றி பெறவும், அரசனின் வியாதிகள் சரியாகவும், நோயினால் சாவை எதிர் நோக்கியிருக்கும் ஒருவர், குற்றம் செய்த ஒருவர் மரண தண்டனை அடைய விரும்பாமல் நவகண்டம் கொடுத்து வீரமரணம் அடைதல், இறக்கும் தருவாயில் இருக்கும் ஒருவர் அதைத் தள்ளிப் போட இறைவனிடம் வேண்டுதல், நெடுநாட்களாக தடைபெற்று இருந்த தேரோட்டம் மீண்டும் ஓட போன்ற காரணங்களுக்காக கொடுக்கப்படுவதாக கருதப்படுகின்றது. மேலும் சோழர்கள் காலத்தில் "வேளக்கார படைகளும்" பாண்டியர்க்கு "தென்னவன் ஆபத்துதவிகள்" என மெய்காவல் படையினர் இருந்தனர். இவர்களின் பாதுகாப்பையும் மீறி அரசர்கள் ஏதாவது உயிர் துறக்க நேரிட்டால் இப்படைவீரர்கள் துர்கையின் முன்பு தங்கள் தலைகளை தங்கள் கைகளாலேயே வெட்டிக்கொண்டு "தலைப் பலி" கொடுப்பதாக சபதம் எடுத்துக்கொண்டவர்கள் என வரலாறு கூறுகின்றது.. இவ்வாறு தலை பலி கொடுக்கப்பட்ட வீரர்களின் வாரிசுகளின் ஜீவனத்திற்கு பொன்னும் பொருளும் நிலமும் வழங்கப்பட்டது.

சில சித்தர்கள் நவகண்ட யோகம் கைவரப் பெற்றவர்கள். வீரராக சுவாமிகள், பாடகசேரி ராமலிங்க சுவாமிகள் போன்ற சித்தர்கள் பல சித்துகள் செய்வதில் தேர்ச்சி பெற்று இருந்தாலும் அபூர்வமான நவகண்ட யோகம் சித்தி பெற்றவர்கள். தங்களுடைய உடலை ஒன்பது தனி தனி துண்டங்களாக்கி யோகம் செய்தவர்கள் என அவர்கள் சரிதம் கூறுகின்றது.

மாமல்லையில் பல்லவர் காலத்தில் (ஏழாம் நூற்றாண்டு

முதல் எட்டாம் நூற்றாண்டு) குடையப்பட்ட குடவரைகளில் ஒன்றான துரௌபதி ரதத்தில் கொற்றவை புடை சிறபம் காணப்படும் அதில் துர்கையின் வலது கால் அருகே ஒருவர் தன் தலையை ஒரு கையால் பிடித்துக்கொண்டு மற்றொரு கையால் தன் தலையை தானே அரிந்து கொள்வது போல - தலை பலி — அரிகண்டம் கொடுப்பது போலவும் இடது புறம் இருப்பவர் தன் உடலைப் பல இடங்களில் வெட்டிக்கொள்வது போலவும் கட்டப்பட்டுள்ளது இது நவ கண்டமாகவும் எடுத்துக் கொள்ளலாம். தனி சிற்பங்களாக 13ஆம் நூற்றாண்டு வரை நவகண்ட சிற்பங்கள் தமிழகத்தில் கிடைக்கின்றது. மேலும் அவை பெரும்பாலும் போர் நடந்த பகுதிகளிலேயே கிடைக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

ஒரு சில நவகண்டங்கள் மட்டுமே கல்வெட்டுக்களில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.. அவற்றில் ஒன்றுதான் தொண்டை மண்டலம் சென்னைக்கு அருகே உள்ள மணிமங்கலம் என்ற கிராமத்தில் உள்ள ஸ்ரீதர்மேஸ்வரர் கோயிலில் இருக்கும் நவகண்ட சிற்பம். இக் கோயிலில் இரண்டு நவகண்ட சிற்பங்களும் இரண்டு அரிகண்ட சிற்பங்களும் இருக்கின்றன. இங்கு ஏழாம் நூற்றாண்டில் பல்லவர்களுக்கும் (முதலாம் நரசிம்ம வர்மன்) சாளுக்கியர்களுக்கும் (இரண்டாம் புலிகேசி) போர் நிகழ்ந்து உள்ளது. அதற்க்கு பின்பும் நடந்து இருக்கலாம் ஆனால் அதற்கான சான்றுகள் எதுவும் இல்லை.

இந்தக்கோயிலில் உள்ள நவகண்ட சிற்பங்களுள் ஒன்று 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. ஸ்ரீ ரங்கநாதன் என்ற யாதவராயரின் (பாண்டியர் வீழ்ச்சிக்குப் பிறகு அந்த பகுதிதையை ஆண்ட சிற்றரசர்கள். தெலுங்கு பொத்தப்பை சோழர்களின் வழி வந்தவர்களாக இருக்கலாம் என்ற ஒரு கருத்து உள்ளது) பிறந்த நாளுக்கு மணிமங்கலத்தில் இருந்த கைகோளரும், கைகோளமுதலி (ருத்திர மஹேஸ்வரர்) கைக்கோளர் படை ! உயிர்பலி மரபை உடையவர்கள்) சபையில் முடிவெடுக்கப்பட்டு புதுமையாக அவர்களில் செம்பாதி என்பவரின் தலையை வெட்டி திருமடைவளாகத்தில் வைக்கப்பட்டது. அப்படி தலைப்பலி கொடுக்கப்பட்ட செம்பாதிக்கு இருநூறு குழி நிலம் வழங்கப்பட்டதாக கல்வெட்டு செய்தி ஒன்று கூறுகின்றது.

இதில் திருநாள் முன்பிலாண்டுகள் என்று வருவது மன்னனின் பதவியேற்பு விழாவா அல்லது ஆண்டுதோரும் நடைபெறும் பிறந்த நாள் விழாவா என்பதும், மேலும் சேத்த — என்று படிக்க வேண்டும். செம்பாதி- சரிபாதி, கோயில் திருக்காப்பு, கோயில்வாசல், திறத்தல்- மூடல், காப்புச் சடங்கு செய்தல், மெய்காப்பு / காவல் முதலியன ஆய்விற்க்கு உரியது என்பது ஆய்வாளர்களின் கருத்து.

# கல்தச்சர்



**கோயில்களிலுள்ள அழகான சிற்பங்களை செதுக்குபவர்கள் கல்தச்சர் எனப்படுவர். கல்லிலும், செப்பிலும் மெய்க்கீர்த்திகளையும் கொடைகளையும் பொறித்து வரலாற்றுச் சான்றுகளை வழங்கியவர்கள் இவர்களேயாவர்.**

**தஞ்சை பெருவுடையார் கோயிலை உருவாகிய சிற்பி வீரசோழ குஞ்சரமல்லனான இராசராசப் பெருந்தச்சன் என்பவராவார். சோழர் காலத்தில் தச்சர்களுக்கும், கல்தச்சர்களுக்கும் சிறப்புரிமைகள் வழங்கப்பட்டதாக புஞ்சையில் உள்ள இரண்டாம் இராதிராசனின் கல்வெட்டு கூறுகிறது.**

**இன்றும், கட்டடத் தொழிலில் கான்க்ரீட் அமைப்புகளை உளி சுத்தியல் கொண்டு உடைப்பவர்களை கல்தச்சர் என்று அழைக்கும் பழக்கம் உள்ளது.**

# பைசாவுக்காக நடந்த துப்பாக்கிச் சூடு

**– ஈசன் எழில்விழியன்**



ஆத்தூர் அருகே பெத்தநாயக்கன்பாளையம், நரசிங்கபுரத்தில், *1972*ல் ஜூன் *23*ம் தேதி விவசாயிகள் நடத்திய போராட்டத்தில், போலீஸ் துப்பாக்கி சூட்டில் ஒன்பது பேர் பலியாகினர். அவர்களது நினைவிடத்தை நாங்கள் காணச் சென்றோம்.

*1972*ஆம் ஆண்டு மின்சார கட்டணத்தை இரண்டு காசுகள் உயர்த்தியது மின்சார வாரியம் அதனை, குறைக்கக்கோரியும், விளை பொருட்களுக்கு விவசாயிகள் விலை நிர்ணயம் செய்தல், விவசாயிகளின் வருமான வரி நீக்கம் செய்தல், விவசாய கடன் ரத்து செய்தல் உள்பட, *15* அம்ச கோரிக்கை வலியுறுத்தி, இந்திய கம்யூனியஸ்ட் கட்சியின் விவசாயிகள் சங்கம் மற்றும் காங்கிரஸ் கட்சியினர், தொடர் போராட்டம் நடத்தினர்.

அந்த ஆண்டு தமிழகம் முழுவதும் பல்வேறு இடங்களில், போலீஸார் துப்பாக்கி சூடு நடத்தினர். இதில், ஆத்தூர் பெத்தநாயக்கன்பாளையம், நரசிங்கபுரத்தில், பிச்சமுத்து *(23)*, கோவிந்தராஜன் *(15)*, முட்டாசு (எ) ராமசாமி *(40)*, மணி *(24)*, ஆறுமுகம் *(26)*, முத்துசாமி *(22)*, விவேகானந்தன் *(32)*, சாந்தமூர்த்தி *(21)*, ராமசாமி *(35)* ஆகிய ஒன்பது துப்பாக்கி சூட்டில் உயிரிழந்தனர். உயிரிழந்த ஒன்பது பேர் உடல்களை, பெத்தநாயக்கன்பாளையம் கிராமம், குடியிருப்பு பகுதியில் அடக்கம் செய்து, நினைவிடம் அமைக்கப்பட்டுள்ளது.

# யானை காதலன்

## – ரா . ஜெகதீஷ்



அத்தியாயம் 2

மீண்டும் இரா.ஜெகதீஷ். மீண்டும் யானை காதல். போன கட்டுரையில் யானையும் நானும், அவளும் நானும் என்ற பாரதிதாசனின் கவிதை போல் தொடங்கியது பெருங்காதல். என்னடா யானை காதல் சொல்ற, சொல்லிட்டு, ஆத்து ஆத்து என்று ஆத்துரானேன்னு தோனுதா? "தமிழ்" கூடப் பெரும் யானைதாங்க.

கதைக்குப் போவோம் மொட்ட மாடியில் இருந்து யானையைப் பார்த்தது முடிந்தது. போன இதழ், யானை அப்படித் தான் அறிமுகமானது, ஒரு பெரிய தயக்கமிருந்தது, பயம் இருந்தது, ஏதோ ஒரு மூளையில் பெருங்காதலும் இருந்தது.

அன்றைக்கு யானை சீக்கிரமே தெருவில் இருந்து வெளியபோய்விட்டது. பார்க்கும்போது இருந்த பயம், யானை போனதுக்கு அப்புறம் பெருங்காதலா



மாறிவிட்டது. இன்றைக்கு மாதிரி தொலைக்காட்சி, பகிரி, முகநூல் வசதியா அன்றைக்கும்?.

காத்திருந்தேன். யானை வந்ததும் அம்மாவிடம் சொன்னேன், "ரொம்பப் பெருசா இருந்தது, பசங்கலாம் பின்னாடியே ஓடி வந்தாக, காசு கொடுத்தா வாங்கித் தும்பிக்கைல ஒலிச்சு வச்சிக்கிச்சி." என்று.

அம்மா சொன்னார்கள் "நீயும் ஆசீர்வாதம் வாங்கவேண்டியது தானா, யார்கிட்டனா கேட்டு காசு வாங்கி இருக்கலாம்ல".

"இல்ல இல்ல வேண்டாம்" நடுங்கிய குரலில் நான்.

"ஏன்டா?"

"ஆமா மாடில இருந்து பார்க்கவே பயமா இருக்கு நா கிட்டபோல" என்ற படபடப்பும் , பயமுமாய் நான் .

இப்படி அம்மாவிடம் தொடங்கி அப்பா, பெரியம்மா, பெரியப்பா, டியுசன் பசங்கள் என ஒருத்தர் விடாமல் துரத்தித் துரத்தி சொல்லிக்கொண்டு இருந்தவன் இன்று யானையின் துதிக்கை பிடித்துக்கொண்டு இதை எழுதும்போது எனக்கே சிரிப்பாக இருக்கிறது .

இரவு சாப்பிட்ட கையோடு யானையும் பின்தொடர்ந்து வந்தது என் தூக்கத்தின் இரவு முழுக்கக் கனவு கனவு முழுக்க யானை. இரவில் எழுந்து பார்க்க கூடப் பயமாய் இருந்தது அப்படி என் கனவு முழுக்கச் சுற்றித் திரிந்தது யானை. எப்படியோ காலை வந்தது எதிரில் நின்றுகொண்டு இருக்குமோ என்ற சந்தகத்தோடே கண் திறந்து பார்த்த போதும் அப்படி ஏதும் இல்லை மனசு சொன்னது கனவு தான் எல்லாம் வெறும் கனவு தான் வேகவேகமாகப் பள்ளிக்குக் கிளம்பினேன்.

நான் தான் முன்னாடியே சொன்னானே நாமா வாயும் கண்ணும் தான் அப்போதைய சமூகவலைத்தளம். சீக்கிரமா போய் எப்படியாவது பசங்கள் கிட்ட யானை பார்த்த சொல்லிடவேண்டும்.

எப்படி இன்றைக்கெல்லாம் எழுந்தவுடனே பல்விளக்குகின்றோமோ இல்லையோ முதலில் அலைபேசி பார்த்து எவனாவது நம்மல ஒரண்ட இழுத்து இருக்கானா, எவன்கூடப் பஞ்சாயத்த ஆரம்பிக்கலாம், எவன் ஹார்ட்டின் போட்டு இருக்கான், எவன் ஷேர் போட்டு இருக்கான்னு கண்கூட முழுசா தொறக்காம அரை மயக்கத்து அலைபேசிய பேசும்ல அப்படி ஒரு நிலையில் தான் அன்றைக்குப் பள்ளிக்கூடம் போனேன்.

எப்பவும் போல வகுப்பில் முதல் ஆள் இன்னும் யாரும் இன்னும் வரவில்லை. ஒரு வழியாக ஒருவர், இருவர் என வந்து சேர்ந்தார்கள் வகுப்புத் தோழர்கள்.

நம் வாய் சும்மாயிருக்குமா, "டேய் யானை பாத்தன்டா"

அவர்களின் ஆர்வமாக. "எங்கடா, எப்போடா? எப்போடா?" எனக் கேட்டனர்.



நான் திமிராக "எல்லாரும் வரட்டும். அப்பதான் சொல்லுவன் என்றேன்."

"டேய், டேய் சொல்லுடா", எனக் கெஞ்சினர்.

"அதான் சொன்னல்ல எல்லாரும் வரட்டும்னு". என மீண்டும் சொன்னேன்.

யானை பயத்தைக் கோவமாக்கி தைரியமாக நின்ற நொடி கூட்டம் சேர்ந்தது.

நான் படித்தது என்.கே. திருமலாச்சாரியார் ஆண்கள் மேல்நிலைப் பள்ளி, திருவல்லிக்கேணி. பூர்விகம், பள்ளியின் பெயரிலே புரிந்து இருக்கும். ஆச்சாரமான பள்ளி என்று பெயருக்கு ஏற்றார்போலப் பிராமண வகுப்பைச் சேர்ந்த பலர் இருக்கும். அனைவருமே திரண்டு கேட்டனர், "என்னடா யானை" என்று

"அதுவாடா எங்க சந்துல, யானை வந்துதுடா நேத்து, செம பெருசா , பயங்கரமா , அழகா இருந்துதுடா", எப்பவும் போல நம்ம விளக்க உரை தொடர்ந்தது.

நடுவில் குறுக்கிட்டான் ஒரு நண்பன் "டேய் அது கேசவன்டா. எங்க யானை தான். பார்த்தசாரதி கோவில்ல தான் இருக்கு. வாரத்துக்கு ஒருமுறை இப்படிக் கூட்டிட்டு போவாங்க. பிறகென்ன இங்க இருந்த கூட்டம் முழுக்க அங்கே தாவியது.

"என்னடா சொல்ற?, என அனைவரும் கேட்க.

"இங்க இருக்கா?"

"ஆமாடா கோவில் யானை தாண்டா" என ஐயா கதை விளக்கம் சொல்ல.

திரி கொளுத்திய ஆய்ரம்வாலா சரத்தில் தண்ணீர் ஊற்றிய நினைப்பில் நான். அவனோ தொடர்ந்து யானை புராணம் பாட, நாமே சென்னையின் ஒட்டுமொத்த தீயணைப்புத் துறையினர் வந்தாலும் அணைக்க முடியாத வயிற்றெரிச்சலில்.

அப்போது முடிவு பண்ணினேன் இது கேசவன் கதை. நமக்கு வேண்டாம். அந்த திருவல்லிக்கேணி பார்த்தசாரதியே வந்து சொன்னாலும் கேசவனை இனி பார்க்கக் கூடாது என்று.

யானை அன்று முதல் பெயரிடப்பட்ட ஒரு விலங்காகப் பதியப்பட்டது.

யானை காதல் (தொடரும்)